கம்பன் விழா வெளியீடு

புதுச்சேரி

8 - 5 - 1981

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | KAMBARUM GANDHI ADIGALUM |
| Author | : | M. P. SIVAGNANAM |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | 8 - 5 - 81 |
| Copy right Holder | : | M. P. SIVAGNANAM |
| Paper used | : | 10.9 Kg. |
| Size of the book | : | 18.2 × 12.4 cm. (Cr 8) |
| Type Points used | : | 11 Pt. |
| No. of Pages | : | 96 |
| No. of Copies Printed | : | 1,000 |
| Printer | : | VETTRI ACHAGAM Madras - 600 005. |
| Binding | : | Card-Board |
| Publisher | : | SEKAR PATHIPPAGAM Madras - 600 078 |
| Price | : | Rs. 5 - 25 |
| Subject | : | Literature |
| Call Number | : | |

# கம்பரும் காந்தியடிகளும்



சிலம்புச் செல்வர்
டாக்டர்
ம. பொ. சிவஞானம்

சேகர் பதிப்பகம்
புத்தகம் வெளியிடுவோர்
விற்பனையாளர்
66 பெரியார் தெரு, எம். ஜி. ஆர். நகர்
சென்னை-600 078

## உருவாக்கியோர்

| | |
|---|---|
| ஆசிரியர் | சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் |
| ஓவியர் | கவிஞர் அமுதோன் |
| பிளாக் செய்தவர் | எலிகண்ட் பிராசஸ் |
| நூல் அச்சிட்டோர் | சங்கர், தங்கம், கன்னிகா, சுதா, இராசேந்திரன் |
| நூல் அச்சகத்தார் | எஸ். குப்புசாமி வெற்றி அச்சகம் |
| பிழை திருத்தம் | மா. ரா. இளங்கோவன் எம். ஏ., |
| முகப்பு வண்ணம் அச்சிட்டோர் | ஷியாம் சுந்தர் பிரபு பிரிண்டிங் ஹவுஸ் |
| தயாரிப்புப் பணி | பெ. பன்னீர்செல்வம் |
| பைண்டிங் | என். ஜானகிராமன் |
| பதிப்பாளர் | வெள்ளையாம்பட்டு சுந்தரம் சேகர் பதிப்பகம் |

## முன்னுரை

"கம்பரும் காந்தியடிகளும்" என்னும் இந்நூல் யான் பல்வேறு காலங்களில் நிகழ்த்திய சொற்பொழிவு களும், எனது "செங்கோல்" பத்திரிகையில் எழுதிய கட்டுரைகளும் கொண்டதாகும். வேறுபட்ட சூழ்நிலை களில் வெளியிடப்பட்ட கருத்துக்களாதலால், ஒன்றோ டொன்று தொடர்பு இல்லாமல் இருக்கலாம். ஆனால், இந்நூலிலுள்ள அனைத்துக் கட்டுரைகளும் கம்பர் படைத்த இராமாயணத்தைப் பற்றியவையேயாகும். அவற்றில் பெரும்பாலானவை காந்தியடிகள் சம்பந்தப் பட்டவையாகும். தமிழ்ப் புலவர்கள், "கம்பனி"லே வள்ளுவனையும், இளங்கோவடிகளையும் கண்டதுண்டு. ஆனால், காந்தியடிகளைக் காண முயன்றவர்கள் இல்லை. காந்தீயத்தில் எனக்குள்ள பற்று காரணமாக, யான் கம்பனிலே காந்தியடிகளைக் காண முயன்றேன். மேற் போக்கான முயற்சிதான் என்றாலும், முதன் முயற்சி யாதலால், கம்ப பக்தர்கள் நல்லெண்ணங் காட்டி வரவேற்பார்கள் என்று நம்புகிறேன்.

இந்த நூலை வெளியிட முன்வந்த 'சேகர் பதிப்பகத் தா'ருக்கு எனது நன்றி உரித்தாகுக! பதிப்பக உரிமையாளர் திரு. வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் தமது பெரு முயற்சியால் இந்நூலை என்னிட மிருந்து பெற்றுள்ளார். என்பால் அவருக்குள்ள அன்பே இதற்குக் காரணம். அவருக்கும் தனியாக எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**ம. பொ. சிவஞானம்**
**6 - 5 - 81**

## பதிப்புரை

செந்தமிழ் வையம் போற்றும் சிலம்புச் செல்வர் அவர்கள் இந்திய விடுதலை வரலாற்றில் உருவாகி வளர்ந்து விளங்குகின்றவர். நாட்டுரிமை, மொழியுரிமைப் போராட்டங்களில் தொண்டராகப் பணியாற்றித் தலைவராக வளர்ந்தவர்.

காந்தியடிகள் அருள் ஒளியில் தெளிந்தவர். தமிழ்ப் பெரியார் திரு. வி. கவைப் போன்று இந்தியப் பற்றும் தமிழ்த் தன்னுணர்வும் ஒருங்கே யமைந்த உருவினர்; அறவழித் திருவினர். ஐம்பதாண்டுகளாகத் தமிழ் இதழாசிரியராக விளங்கிப் பயன் விளைத்து வருபவர்.

பல்கலைச் செல்வர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் போன்ற தமிழ் இலக்கிய ஆய்வறிஞர். நூற்றுப்பத்து நூல்களுக்குமேல் எழுதி இலக்கிய வளம் சேர்த்து வருபவர்.

சிலப்பதிகார நெறியும் தென்பாண்டி வீரன் கட்டபொம்மன், கப்பலோட்டிய தமிழன் ஆகியோரின் உரிமை வாழ்வும்பற்றி, நாடும் மக்களும் நன்கறிந்து, விடுதலை வீரம் பெற அயரா துழைத்துப் பெரும் வரலாறு படைத்த தலைவர் இவர்.

தமிழக எல்லைப் போராட்ட காலம் முதல் அய்யா அவர்களைத் தொலைவிலிருந்தவாறே தொடர்ந்து கவனித்து வியந்து போற்றி வந்தேன். கடந்த ஆண்டில் (1980 - ஜூன்) அவரது இதழியல் துறைத் தொண்டுகளைத் தொகுத்துப் பார்க்கும் ஆய்வுப் பணியில் ஈடுபட்டுள்ள இனிய நண்பர் பேராசிரியர் மா. ரா. இளங்கோவன் அவர்களுடன் சென்று நேரில் பழகும் பேறு பெற்றேன். பெரு மகிழ்வுற்றேன்.

அறமும் பண்பும், தமிழும் வீரமும் அமைந்த அவர்தம் அரசியல் இலக்கிய சிந்தனைகள் நிறைந்த இந்நூல் எமது சேகர் பதிப்பகம் வாயிலாக வெளியிட இசைந்து உதவிய மாண்புமிகு சிலம்புச் செல்வர் அவர்கட்கு எனது பணிவான வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

கம்பரும் காந்தியடிகளும் பொருந்தும் பாங்கினை விருந்தாக்கித் தரும் இந்நூலினை விரிந்த தமிழ் வையத்தின் முன் மகிழ்ந்து படைக்கின்றோம்!

படித்துப் பயன்பெறுக!

அன்பன்

**வெள்ளையாம்பட்டு சுந்தரம்**

# பொருளடக்கம்

1

# கம்பரும் காந்தியடிகளும்

கம்பருக்கும் காந்தியடிகளுக்கும் நடுவே சுமார் ஆயிரமாண்டுக் கால இடைவெளி உண்டு. ஆயினும், சமுதாயத்திற்குத் தேவைப்படும் அடிப்படைத் தருமங்களில் அவர்களிடையே கருத்தொருமைப்பாடு இருக்கக் காண்கிறோம்.

## ஒரு கேள்வி

தேசம் சுதந்திரம் பெற்ற நாளிலே மேற்கு வங்கத்தின் கிராமப்புறங்களிலே காந்தியடிகள் யாத்திரை செய்து கொண்டிருந்தார். ஆம்; இந்து - முஸ்லிம்களிடையே நிலவிய மதப் பூசலைத் தீர்த்து வைக்க. அப்போது அடிகளாரைச் சந்தித்துச் செய்தி நிருபர்கள் கேட்டார்கள்:

'தேசத்தின் தலைநகரிலே சுதந்திர விழா கோலாகலமாக நடைபெறுகிறதே, சுதந்திரத்தைத் தேடித் தந்த தந்தையாகிய தாங்கள் அந்த விழாவில்

கலந்து கொள்ளாமல் இங்கு கிராமம் கிராமமாகச் சுற்றி அலேவது ஏன்?' என்று.

அடிகள் கணமும் தாமதியாமல், 'சுதந்திரம் வந்து விட்டதா? எங்கே காட்டுங்கள்; நான் காண வேண்டும்?! என்று வேதனை கலந்த குரலில் பதிலளித்தார்.

### உண்மைச் சுதந்திரம்

"இதோ பாருங்கள்; இந்துக்களில் வெறிபிடித்த கயவர்கள் முஸ்லிம் பெண்களைக் கற்பழிப்பதும், அப்படியே முஸ்லிம்களில் வெறிபிடித்த சிலர் இந்துப் பெண்களைக் கற்பழிப்பதும் நடைபெறுகிறதே, இதுவா நான் கேட்ட சுதந்திரம்?" என்று செய்தி நிருபர்களைத் திருப்பிக் கேட்டார். அதன்பின், 'சுதந்திரம்' என்பது எது என்பதனை அடிகளாரே விளக்கினர். அது வருமாறு :

"நான் சொல்லுகிறேன்; நள்ளிரவிலே இளம் பெண் ஒருத்தி, உடல் நிறைய பொன் ஆபரணங்களை அணிந்து கொண்டு, ஆண்களின் பயமின்றி நடுவீதியில் செல்ல முடியுமானால், அதுதான் நான் விரும்பும் சுதந்திரம். இந்தச் சுதந்திரம் நாட்டில் இல்லையானல், அந்த நாட்டிலே நாகரிகமும் இல்லையென்றுதான் பொருள். சுதந்திரமும் இல்லையென்றுதான் பொருள்."

காந்தியடிகளுக்கு இருந்த இந்த உணர்வு தமிழ் மகனை கம்பருக்கும் இருந்தது. தானே முதனூல் படைக்கத் தகுதி பெற்றிருந்த கம்பர் வான்மீகி படைத்த ராமாயணத்திற்கு வழி நூல் படைத்தாரே, அது எதனல்?

## காவிய மாகவிகள்

வான்மீகி ராமாயணத்தின் கருப்பொருள் கம்பரைக் கவர்ந்தது. அதனுல் அந்த மாகாப்பியத்திற்கு வழி நூல் செய்தார். இராமாயணத்தின் கருப்பொருள் என்ன?

ஒரு பெண்ணின் கற்புக்குப் பாதுகாப்புத் தராதவன்-பிறன் மனைவியைக் கற்பழிக்க விரும்புபவன்-பத்துத் தலைகளைப் பெற்றிருந்தானுயினும், அவன் அழிவது திண்ணம் என்கிறது இராமாயணம்.

இராவணனுக்குப் பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் கற்பித்தார் வான்மீகி. கம்பர் விரும்பியிருந்தால், இராவணனுடைய தலைகளில் ஒன்பதை அகற்றி, ஒற்றைத் தலையனுகவே நமக்குக் காட்டியிருக்கமுடியும்.

## இராவணன்

வான்மீகியிலே எத்தனை எத்தனையோ மாறுதல்களைச் செய்த கம்பர் பகுத்தறிவுக்குப் பொருந்தாத பத்துத் தலை இராவணனை நமக்கு அப்படியே அறிமுகப் படுத்தினுரே, அது எதனுல்? வான்மீகி முனிவர் இராவணனுக்கு பத்துத் தலைகளையும், இருபது கரங்களையும் கற்பித்ததன் உட்பொருளைக் கம்பர் உணர்ந்து கொண்டார். அது என்ன?

பத்துத் தலைகளையும், இருபது கைகளையும் உடையவனுயினும், திக்கெட்டையும் தேவர் மூவரையும் வென்ற தீரனுயினும், இமயமலை போன்ற தேகத்தைப் படைத்த தம்பியைப் பெற்றவனுயினும், தேவர் கோமானையே வென்ற மாவீரனை மகனுகப் பெற்றவனுயினும், இமயமலையையே தன் ஒரு தோளால் தூக்கிய ஆற்றல் பெற்ற

வனுயினும், ஐம்புலன்களேயும் அடக்கித் தவம்புரிந்து சிவபெருமானிடமே தெய்வத்தன்மை பொருந்திய வீர வாளேப் பெற்றவனுயினும், கடலால் சூழப்பட்ட பாது காப்புடைய நாட்டை ஆள்பவனுயினும், ஒரு பெண்ணின் கற்புக்குக் கேடு இழைப்பானுயின் - இல்லே, கேடு இழைக்க நினேப்பானுயின் அவன் அழிந்தொழிவது திண்ணம் என்பதனே மனித குலத்திற்கு உணர்த்து வதற்காகவே வான்மீகி முனிவர் அதிசயமான முறையில் இராவணனேப் படைத்துக் காட்டினுர். இந்த உண்மை யைக் கம்பர் உணர்ந்ததனுலேயே வான்மீகி படைத்த பத்துத்தலே இராவணனே அப்படியே எடுத்துக்கொண் டார்.

**கற்பின் பெருமை காக்க**

இராமாயணக் கதையிலே ஒரு பெண்ணின் கற்புக்குக் கேடு செய்ய நினேத்த இராவணனுக்கெதிராக - பறவை யினத்தின் சார்பில் இராமனுக்கு ஜடாயு உதவி புரிகிறது. ஐந்தறிவு படைத்த மிருக வர்க்கத்தைச் சார்ந்த குரங்கினம் முழுவதும் போர்க்கோலம் கொள்கிறது.

மனிதரினும் மேம்பட்ட தேவர்களெல்லாம் இராவண னுடைய வீழ்ச்சியை விரும்புகிருர்கள். உடன்பிறந்த தம்பியும் அண்ணனேத் துறந்து அன்னியனுடன் சேர்ந்துகொள்கிருன். இவையெல்லாம் எதைக் காட்டு கின்றன? ஒரு பெண்ணின் கற்புக்குக் கேடு இழைப்ப வனே உயிர்க்குலம் முழுவதுமே எதிர்த்துப் போராடும் என்ற உண்மையையல்லவா!

இந்தப் பேருண்மை வான்மீகி இராமாயணத்தில் வற்புறுத்தப்படுவதால்தான் கம்பர் அம் மாகாப்பியத்

திற்குத் தம் தாய் மொழியான தமிழிலே வழி காப்பியம் படைத்தார். முதல் காப்பியம் ப . டக்கத் திறனற்றதால் அல்ல. பெண்ணின் கற்புக்குக் காப்பளிக்க விரும்பும் எவரும் இந்த உண்மையை மறுக்கவோ, மறைக்கவோ முடியாது.

**தமக்குத் தாமே**

பெண் குலத்தின் கற்பு ஆண் குலத்தை நம்பி இருக்கக் கூடாதென்று வான்மீகியும், வியாசரும், இளங் கோவும், கம்பரும் கருதினர்.

பெண் குலத்தின் கற்புக்குக் காப்புத் தர வேண்டியது ஆண் குலத்தின் கடமை. இந்தக் கடமையை நிறை வேற்ற ஆண் குலம் தவறுமாயின் அந்நிலையில் தனது கற்புக்கு தானே காப்புத் தேடிக்கொள்ள பெண் குலத் துக்கு உரிமையும் திறமையும் உண்டு. இந்த உண்மை சீதை, பாஞ்சாலி, கண்ணகி ஆகிய கற்பரசியர் வாயிலாக, அவர்களுடைய தலைமையைப் பெற்றுள்ள காப்பியங்களில் கவிஞர்களால் வலியுறுத்தப்படுகிறது.

ஒரு கொடுமைக்கு இன்னொரு கொடுமை பரிகார மாகிவிடாதுதான். ஆனால், கற்புக்குக் கொடுமை இழைத்த ஆண்களை வன்முறையிலும் பழி வாங்க, பெண் குலத்திற்கு உரிமை வழங்குகின்றனர் கவிஞர்கள்.

**கண்ணகியின் மறம்**

இளங்கோ படைத்த சிலப்பதிகாரக் கண்ணகி, குற்றமற்ற கோவலன் மீது பொய்க் குற்றம் சாட்டி, அவனுக்கு மரண தண்டனை விதித்ததால் கொடுங் கோலனாகிவிட்ட பாண்டியன் நெடுஞ்செழியனை எதிர்த்து

303

வாதப்போர் புரிகிறாள்; அவன் உயிர் துறக்கவும் காரணமாகிறாள். அத்துடன், அவள் ஆறுதலடைந்து விடவில்லை. விதவைக் கோலம்கொண்டு வீட்டில் மறைந்து வாழவில்லை. பாண்டிய நாட்டை விட்டு தன் தாயகமான சோழ நாடு திரும்பி கைம்மை விரதங்களைக் கடைப்பிடித்து துன்பவாழ்வு நடத்தவில்லை. கொடுங்கோலுக்கு அடங்கி வாழ்ந்த குற்றத்திற்காக மதுரை மாநகரை தீக்கிரையாக்கிறாள். இத்தனைக்கும் பாண்டியன் நெடுஞ் செழியன் கேடிழைத்தது கண்ணகியின் கற்புக்கல்ல. கணவனோடு கூடிய வாழ்க்கைக்குத்தான்; அந்தக் குற்றத் துக்காகத்தான் மதுரையை அழிக்கிறாள் ஆவேசம் கொண்ட கண்ணகி.

### சீதையின் நிலை

கம்பர் கண்ட சீதையும் பழிவாங்கும் வன்முறையிலே கண்ணகியுடன் போட்டியிடும் மறத்தியாகவே காட்சியளிக்கிறாள். அசோகவனத்தில் தன்னைச் சந்தித்த அனுமனிடம் கம்பர் கண்ட சீதை,

> "அல்லன் மாக்கள்
> இலங்கையது ஆகுமோ?
> எல்லை நீத்த
> உலகங்கள் யாவுமென்
> சொல்லினால் சுடுவேன்;
> அது தூயவன்
> வில்லின் ஆற்றற்கு
> மாசுஎன்று வீசினேன்"

என்று சொல்லுகிறாள்.

“என் கற்புக்குக் கேடிழைக்க நினைத்த கொடுங்கோலனான இராவணனின் இலங்கை நகரை மட்டுமன்றி, அவனது கொடுமையைப் பார்த்துக் கொண்டிருக்கும் உலகங்கள் அனைத்தையுமே என் கற்பின் திறத்தால் சுட்டெரிப்பேன்; அது காகுத்தன் கையிலுள்ள கோதண்டத்திற்கு இழுக்கைத் தந்துவிடுமாதலால், கணவன் வந்து மீட்கும்வரை நான் பொறுத்திருக்கிறேன்” என்பது சீதையின் வாதம்.

ஆம்; ஒரு பெண்ணின் கற்புக்குக் கேடு நினைப்பவனின் நாட்டையே அழிக்கலாம். அதனைப் பார்த்திருக்கும் உலகங்கள் யாவையும் அழிக்கலாம். இது, சீதையின் வாயிலாகக் கம்பர் தரும் செய்தி.

**பாஞ்சாலி**

பாரதியாரும், “கொடுங்கோலரான துரியோதனாதியரைத் தன் கணவன்மார் அழித்து முடிக்கும் நேரத்திலே, அவர்களில் ஒருவனான துச்சாதனனுடைய ரத்தத்தை எடுத்து எண்ணெயெனக் கருதித் தலையில் தடவி, அவன் எலும்புகளைச் சீப்பாக்கி, போர்க்களத்தில் நின்று என் கூந்தலை வாரி முடிப்பேன். அதுவரை முடிக்க மாட்டேன்” என்று சூளுரைக்கும் பாஞ்சாலியையே காட்டினார்.

இளங்கோ காட்டும் கண்ணகியும் சரி; கம்பர் காட்டும் சீதையும் சரி; பாரதியார் காட்டும் பாஞ்சாலியும் சரி, பெண்மைக்குரிய தாய்மைக்கு எதிரான முறையில் தான் சூளுரைக்கின்றனர். ஆம்; பழிக்குப் பழி! இது தான் அவர்கள் பெண்ணினத்திற்குப் போதிக்கும் கொள்கை.

## இன்றைய நிலை

இன்று நாட்டில் நாம் காண்பதென்ன? பெண் குலத்தின் கற்புக்குக் காப்பற்ற நிலையல்லவா? இந்த நிலை இங்கு அங்கு என்றில்லாமல், குமரி முதல் இமயம் வரைப் பரந்து கிடக்கும் பாரதம் எங்கணும் பரவி வருவதைத்தானே பார்க்கிறோம். இதற்குப் பரிகாரம் என்ன?

ஆண்களுடன் ஒப்பிடும்போது பெண்கள் உடலால் பலமற்றவர்களே. ஆனால், அவர்கள் வன்நெஞ்சம் கொண்டுவிட்டால் அவர்களுடைய வலிமைக்கு ஆணினத்தின் வலிமை நிகராகாது. இந்த உண்மையை உணர்த்தத்தானே என்னவோ சங்ககாலப் புலவர்கள் போர்க்களமான பாலை நிலத்துக்குக் கொற்றவை என்னும் பெண் தெய்வத்தைப் படைத்தனர். அதுவும் கோர வடிவத்திலே!

ஒரு பெண், தன்னுடைய கற்புக்கு ஆண்களால் கேடு நேருங்கால், கொற்றவை கோலம் கொண்டால் தான் தன் கற்புக்குக் காப்பு தேட முடியுமென்றால், அந்தக் கோலத்தைக் கொள்வதிலே உலகம் தவறு காண முடியாது. ஆனால், ஆண் இனம் இன்னமும் அந்த அளவுக்குப் பெண்குலத்தை நிர்க்கதியாக விட்டு விடவில்லை என்று நம்புவோமாக!

## வழிபடும் தெய்வம்!

கம்பரும் காந்தியடிகளும் சீதையின் நாயகனை இராமனை வழிபடு தெய்வமாகக் கொண்டவர்கள். இதில் அவர்களிடையே கருத்தொற்றுமையைக் காண்கிறோம். இராமன் மகாவிஷ்ணுவின் அவதாரம் என்று வான்மீகி

சொல்லவில்லை என்றும், கம்பர்தான் அப்படிச் சொன்னதாகவும் தமிழ்நாட்டிலே சிலர் வாதாடுகின்றனர்.

கம்பர் அளவுக்கு இராமனைப் பரம்பொருளின் இடத்தில் வைத்து வான்மீகி வழிபடவில்லை என்பது உண்மைதான். ஆனால், அந்த முனிவர்கூட, தனது காப்பியத்தில் பல்வேறிடங்களில் இராமனை விஷ்ணுவின் அம்சமாகக் கூறுகிறார். ஆம்; விஷ்ணுவின் அவதாரம் என்ற பொருளில்தான்!

ஆனால், தனது முன்னோனான வான்மீகியை விடவும் கம்பர் இராமனைத் தெய்வமாகவே கொண்டு, ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலேயும் அம்மாமனிதன் மீது காப்புச் செய்யுள் படைத்திருக்கின்றார்.

### தனியிடம்

காந்தியடிகளோ, இராமபிரானை இந்திய விடுதலைப் போருக்கு ஆதர்சம் அளிக்கும் மாபெரும் சக்தியாகவே செய்துவிட்டார்.

இராமனுக்கு அவர் கொடுத்த அரசியல் முக்கியத்துவத்தை இந்த இருபதாம் நூற்றாண்டில் இந்தியப் பெருநாட்டில் தோன்றிய வேறு எந்தத் தலைவரும், புலவரும் தரவில்லையென்று சொல்லலாம்.

### இராம ராஜ்யம்

இந்தியாவிலிருந்து வெள்ளையரை வெளியேற்றிய பின் தாம் படைக்கவிருக்கும் சுயராஜ்யத்திற்கு "இராம ராஜ்யம்" என்று அடிகள் பெயர் தந்தார்.

ஆனல், கம்பர் தமது காப்பியத்தில் இராம ராஜ்யத்தைக் காட்டத் தவறிவிட்டார். அரியணையில் இராமனை அமர்த்தியதோடு அவர் கதையை முடித்துவிட்டார்.

வான்மீகியில் உத்தரகாண்டத்தில் இராம ராஜ்யம் வருணிக்கப்படுகிற தென்றாலும், அந்த ராஜ்யத்தின் தலைவனை இராமன் நிறை கர்ப்பிணியான சீதையை வனத்திலே கொண்டுபோய் விடச் சொல்லுகிறான். இதனால், அவன் தனது ராஜ்யத்திற்குக் களங்கம் தேடிவிட்டான்.

ஒருவகையில் அவனது செய்கை அரச நீதி என்று வருணிக்கலாமென்றாலும், முன் எப்போதோ வனம் பார்க்க வேண்டும் என்று சீதை கேட்டதை ஒரு சாக்காகக் கொண்டு பின்விளைவை அவளறியாவண்ணம் மறைத்து வைத்து, அவளை வனத்திலே கொண்டுபோய் விட்டுவிட்டது ஏற்கத்தக்கதல்ல.

இதனைக் காந்தியடிகளும் ஏற்கவில்லை. இது கம்பருக்கும் பிடிக்கவில்லை. அதனால், அந்த மகாகவி உத்தர காண்டத்தையே விட்டுவிட்டார்.

### கம்பரின் இராமனே

காந்தியடிகள், ''நான் காணும் இராமன் வான்மீகி ராமாயணத்திலிருந்து வேறுபட்டவன்'' என்று அடிக்கடி கூறினர். ஆனல், கம்பர் காட்டிய இராமனைக் காந்தியடிகள் அறிந்து கொண்டிருந்தால், ''நான் காணும் இராமன் கம்பர் காட்டிய இராமனே'' என்று மனநிறைவோடு கூறியிருப்பார்.

வான்மீகியிலே வரும் இராமன் மதுவருந்தும், புலால் உண்ணும் வழக்கமுடையவன். கம்பர் கண்ட

இராமன் இந்த இரண்டையும் வெறுப்பவன்! சீதையை வனத்திலே கொண்டுபோய் விடச் சொல்கிற கொடுமையைச் செய்யாதவனும் ஆவான். இதெல்லாம் காந்தியடிகளுக்குத் தெரிந்திருந்தால் கம்பர் கண்ட இராமனையே தாம் வழிபட்டு வருவதாக அவர் கூறியிருப்பார்.

கம்பர் என்றொரு மானுடன் தோன்றி, வான்மீகி இராமாயணத்திற்குத் தமிழிலே வழிநூல் செய்திருப்பது காந்தியடிகளுக்குத் தெரிந்திருந்தது.

1920ல் வேலூர் சிறையில் அரச நிந்தனைக் குற்றத் திற்காகத் தமக்கு விதிக்கப்பட்ட தண்டனையை ராஜாஜி அனுபவித்து வந்தார். சிறைவாசியான அவருக்குக் காந்தியடிகள் எழுதிய கடிதம் ஒன்றிலே,

> "தங்களிடம் இராட்டினமும் இராமா யணமும் இருப்பது குறித்து எனக்குப் பொருமை உண்டாகிறது. வான்மீகி இராமா யணத்தை ஆபாசமாக மொழி பெயர்த்திருக் கிருர்களே, அது இருக்காது உங்களிடம்! கம்ப ராமாயணம்தான் வைத்திருப்பீர்கள். அதில் சில பகுதிகளை நான் போப் தயாரித் துள்ள தமிழ் வாசக நூலில் படித்திருக்கிறேன்."
>
> ("சிறையில் தவம்" - பக். 124)

என்று குறிப்பிட்டிருக்கிருர்.

"பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்பது போல, கிறித்துவப் பாதிரியான திரு. ஜி. யு. போப் தாம் எழுதிய பாட புத்தகம் ஒன்றிலே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்துள்ள சில கவிதைகளைப் படித்த

அளவிலேயே கம்பர் ஒரு மகாகவி என்பதைக் காந்தியடிகள் அறிந்து கொண்டுவிட்டார்.

ஆயினும், கம்பர் கண்ட ராமன் குடிப் பழக்க மில்லாதவன்; புலால் உண்ணாதவன் என்ற உண்மை களையெல்லாம் காந்தியடிகள் அறிந்து கொண்டிருக்க முடியாது. காந்தியடிகளிடம் நெருங்கிப் பழகிய தமிழகத் தலைவர்களிலே எவரும், வான்மீகியிடமிருந்து பல விஷயங்களில் வேறுபட்டு கம்பர் தனது இராமனைப் படைத்திருப்பதைச் சொல்லியிருக்க மாட்டார்கள். அரசியல் புயலிலே ஏற்பட்ட சந்திப்பில் இவற்றை யெல்லாம் சொல்ல நேரம் இருந்திருக்காதுதானே!

சுதந்திர இந்தியாவில் தாம் காணவிருக்கும் ராஜ்யத்தை "இராம ராஜ்யம்" என்று காந்தியடிகள் வருணித்ததற்குப் பல காரணங்களிருப்பினும், அடிப் படைக் காரணம் குடிப்பழக்கத்தை அடியோடு ஒழித்து விட்ட ராஜ்யமாக அது இருக்கும் என்ற நம்பிக்கைதான். பகைவனுக்கும் அருளுகின்ற சன்மார்க்க ராஜ்யமாகவும் இருக்கும் என்றும் அவர் கற்பனை செய்து கொண் டிருப்பார் என்று நம்பலாந்தானே!

# 2

# பொது நோக்கு

## கம்பரது சமயம்

இராமாயணக் காப்பியத்தைத் தமிழில் தந்த கம்பர், சமயத்தில் மிகுந்த பற்றுடையவர். அவர் இந்து சமயத்தவர் என்பது இதுவரை எவரும் மறுக்காத பேருண்மையாகும். அதிலே, 'சைவத்தைச் சார்ந்தவரா, வைணவத்தைச் சார்ந்தவரா?' என்பது இதுவரை தெளிவுபடுத்தப்பட வில்லை. அவர் படைத்த காப்பியம் முழுவதையும் படித்து முடித்த பின்னரும் தெளிவுபெற முடியவில்லை. இதற்குக் காரணம், தாம் சைவரா, வைணவரா என்பதை அவரே காட்டிக்கொள்ள விரும்பாததுதான்.

## சமய நோக்கு

சைவ - வைணவ வேறுபாட்டை யொட்டிப் பிறந்த விரோதப்பாட்டை கம்பர் வெறுத்தார். அவர் காலத்திலே,

சைவர் 'சிவனே முழுமுதற் கடவுள்' என்றனர். வைண வரோ 'எங்கள் விஷ்ணுவே முழுமுதற் கடவுள்' என்றனர். தாயுமானவர் பாடியதுபோல, சமயவாதிகளெல்லாம் 'என் தெய்வம்', 'உன் தெய்வம்' என்று எங்கும் தொடர்ந்து எதிர்வழக்காடி நின்றனர். அவர்களை,

"அரன் அதிகன்; உலகு அளந்த அரிஅதிகன்
என்றுரைக்கும் அறிவிலோர்......"

[நாடவிட்ட படலம்]

என்கிறார் கம்பர்.

இராமாயணக் காப்பியத்தின் நாயகனான இராமன் திருமாலின் அவதாரம் என்கிறார் வான்மீகி. கம்பரும் அதையே உறுதிப்படுத்தினார். ஆயினும், வான்மீகியின் காப்பியத்தைக் கம்பர் திருத்தியமைத்துள்ள முறை யானது, சமயங்கடந்த வாழ்வை அதற்குத் தந்துவிட்டது.

### சமயங் கடந்த பற்று

சைவத்திலே அழுத்தமான பற்றுடைய புலவர் பெரு மக்கள்கூட கம்ப நாடனுக்குத் தங்களை அடிமைப் படுத்திக் கொண்டதுண்டு. வ.வெ.சு. ஐயர், டி. கே.சி., ரா. பி. சேதுப்பிள்ளை, தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், கம்பன் அடிப்பொடி சா. கணேசன் ஆகியோரெல்லாம் சமயத்தால் சைவர்களாவர். அப்படியிருந்தும், அவர் களெல்லாம் கம்பராமாயணத்தின் புகழ் பரப்புவதையே தங்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டனர். அந்த அளவுக்கு அனைத்துச் சமயத்தினரும் விரும்பத் தக்க அளவுக்கு இராமாயணத்தைப் படைத்துவிட்டார் கம்பர். ஆம்; அவர் சர்வ சமய சமரசவாதி!

**கம்பர் வழியில் காந்தியடிகள்**

கம்பரை அறியாதவராக இருந்தும், அந்த மகாகவி யின் அடிச்சுவட்டையே பின்பற்றி, சமயங்களிடையே ஒருமைப்பாடு காண காந்தியடிகள் தம் வாழ்நாள் முழுதும் பாடுபட்டார்.

'ராம் - ரகீம்' என்று கோஷித்து, இந்து - முஸ்லிம் மக்களிடையே ஒற்றுமையை வளர்க்க அவர் முயன்ருர். "ராம்தூன்" பாடலை நாள்தோறும் மாலை நேரத்தில் பிரார்த்தனை மேடையில் காந்தியடிகள் பாடினுர். ராம்தூன் பஜனையிலே,

"ஈசுவர அல்லா தேரே நாம்
சபுகோ சன்மதி ஹேபகவான்"

என வரும் பல சமயங்களுக்குரிய தெய்வங்களின் பெயர் களைக் கொண்ட வாசகத்தைச் சொன்னுர். பிரார்த்தனை மேடையைச் சுற்றிக் குழுமியிருந்த மக்களையும் தம்மைப் பின்பற்றி சர்வசமயத் தெய்வங்களின் நாமங்களைச் சொல்ல வைத்தார். இந்த வகையிலே கம்பருடைய பிரசாரக ராகவே காந்தியடிகள் விளங்கினுர் எனலாம்.

**சைவ - வைணவம்**

கம்பர், வைணவர்கள் வழிபடும் தெய்வமான திரு மாலின் அவதாரம் எனப்படும் இராமனிடம் பக்தி கொண்டிருந்தாரென்ருலும், சிவ பக்தியையும் தனது காப்பியத்தில் சேர்த்தே வழங்குகிருர். திருமாலின் மனி தாவதாரமான இராமபிரானே சிவபெருமானை வழிபட்

டார் என்ற செய்தியையும் கம்பர் தமது காப்பியத்திலே சேர்த்து வைத்திருக்கிறார். மாவீரனான வாலியை சிவ பக்தனாகவே அறிமுகப்படுத்தியிருக்கிறார். இத்தனைக்கும் மேலாக, இராவணனையே சிவ பக்தனாகக் காட்டியிருக்கின்றார்.

## மொழிக் கொள்கை

காந்தியடிகள் உலகிலுள்ள எந்த மொழியிடமும் பகைமை பாராட்டியதில்லை. அதுபோல, ஒருமொழி இன்னொரு மொழியின் மீது ஆதிக்கம் செலுத்துவதையும், அவர் அங்கீகரிக்கவில்லை.

உலக மொழிகளிலே ஒவ்வொன்றுக்கும் தன் உரிமையையும், பெருமையையும், தனித்தன்மை யையும் காத்துக் கொள்ள உரிமை உண்டு என்பது காந்தியடிகளின் கொள்கையாக இருந்தது. இவ்வகையில்தான் இந்திய மொழிகள் மீது ஆங்கில மொழி பெற்றுள்ள ஆதிக்கத்தை அவர் வெறுத்தார். அதனைத் தகர்த்தெறியவும் பாடுபட்டார். இதிலேயும் கம்பருக்கும் காந்தியடிகளுக்கும் கொள்கை உடன்பாடு இருப்பதைக் காண்கிறோம்.

## இரு மொழிகள் இரு விழிகள்!

வடமொழியிலுள்ள வான்மீகி ராமாயணத்தை முதல் நூலாகக் கொண்டுதான் கம்பர் வழிநூல் படைத்தார். அதனால், வடமொழியின்பால் அவருக்கிருந்த வாஞ்சை நன்கு புலப்படுகிறது. அவர் அதனைத் "தேவ பாஷை" என்றும் கூறுகின்றார். அம்மொழியில் இராமாயணத்தைப் படைத்தளித்த முதனூல் ஆசிரியரான வான்மீகியைத் "தெய்வ மாக்கவி" என்றும் புகழ்ந்துரைக்கின்றார்.

ஆயினும், கவிச்சக்கரவர்த்தி கம்பர், வடமொழிக்கு எந்த வகையிலும் தாழ்ந்த மொழியாகத் தமிழைக் கருத வில்லை. வடமொழியைப் போலவே தமிழும் "தெய்வ மொழி" என்று கருதினர். வடபுலத்து அயோத்தியில் பிறந்த ஆரியனான இராமனும் தமிழ் அறிந்தவன் என்று கம்பர் சாதிக்கின்றார்.

"தென்சொற் கடந்தான்
வடசொற் கலைக்கு
எல்லை தேர்ந்தான்"

என்று இராமபிரானுடைய தென்மொழிப் புலமையையும், வடகலை உணர்வையும் புகழ்கின்றார்.

இலங்கை அசோகவனத்தில் சிறை வைக்கப் பட்டிருந்த கற்புக் கனலியைச் சந்தித்த அனுமன் அவளுடன் தமிழில் பேசினான் என்று பொருள் தோன்றவும் கம்பர் கவிதை படைத்துள்ளார். இதனால், வடமொழியையும் தமிழ் மொழியையும் இரு கண்களாக அந்த மகாகவி கொண்டிருந்தார் என்ற உண்மை புலப் படும். காந்தியடிகளுடைய பார்வையும் இதுவாகவே இருந்தது.

### ஒருவனுக்கு ஒருத்தி!

இன்னொரு விஷயத்திலும் கம்பருடைய அடிச் சுவட்டிலேயே காந்தியடிகள் நிற்கிறார் எனலாம். கம்பர் கண்ட இராமன் ஏகபத்தினி விரதன். ஆம்; 'ஒருத்திக்கு ஒருத்தன்' என்பது பெண் கற்பாகுமானால், 'ஒருத்தனுக்கு

ஒருத்தி' என்ற ஆண்கற்பும் அவசியம் என்பதைக் கம்பர் தமது மாகாப்பியத்திலே வலியுறுத்துகிறார்.

தந்தை தயரதன் பத்தாயிரம் மனைவியரை சொத்தாகப் பெற்றிருந்தான் என வான்மீகி கூறுகின்றார். பலதாரக் கொடுமையை உணர்த்த இதுவும் போதாதென்று எண்ணிய கம்பர், தயரதனுக்கு அறுபதினாயிரம் மனைவியர் இருந்தனர் என்று கற்பித்துக் கூறுகிறார்.

வான்மீகியும் சரி; கம்பரும் சரி; ஒரு மன்னன் பல மனைவியரை மணந்து வாழ்வது அரச(அ)நீதியாக இருந்ததனை எதிர்ப்பதற்கே தயரதனுக்குப் பல்லாயிரக் கணக்கில் மனைவியரைக் கற்பித்தனர். இதிலே, அவர்களிடையே போட்டி!

ஆனால், தயரதன் மைந்தனோ ஏகபத்தினி விரதன்! மனைவியரைப் பொறுத்த விஷயத்திலே மகன் இராமன், தந்தை தயரதனின் வாரிசு அல்ல; பலதாரக் கொடுமையைத் தயரதன் தலைமுறையோடு முடித்து வைத்து, ஏகதார விரதத்தை இராமனிடமிருந்து தொடங்கி வைக்க வான்மீகியும் கம்பரும் முயன்றிருக்கின்றனர். இதிலே வான்மீகியை விடவும், வள்ளுவரை முன்னோனாகக் கொண்ட கம்பர் தீவிரவாதியாகக் காட்சியளிக்கிறார்.

### கம்பர் கருத்து

உண்மையில், தயரதன் மனைவியர் மூவரே. அவர்கள் கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகியோராவர். நடமாடும் மனைவியர் இம்மூவர்தாம். பத்தாயிரம், அறுபதினாயிரம் என்பதெல்லாம் காப்பியத்தில் படமாடும்

மனைவியரே. மூன்று மனைவியரைப் பெற்றதுகூட, தயரதன் வாழ்வில் நேர்ந்த பிழையெனக் கம்பர் கருது கின்றார். மணந்தவளைத் தவிர பிறிதொருத்தியை நெஞ் சாலும் நினைக்காத கற்பொழுக்கத்தை ராமனிடம் கம்பர் காட்டுகின்றார்.

சீதைக்கும் ராமனுக்கும் திருமணம் நடந்த நாளன்று இரவிலே அவர்கள் பள்ளியறையில் சந்திக்கிறார்கள். ஆம்; முதல் இரவு சந்திப்பு! அப்போது இராமன் சீதையிடம்,

"இந்த, இப்பிறவிக்கு
இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்"

என்று சூளுரைக்கின்றான். இதனை இராமனுக்கு நினைவூட்டும்படி அசோக வனத்தில் தன்னைச் சந்தித்த அனுமனிடம் சீதை கூறுகின்றாள்.

**இராமனின் நோக்கம்**

இராமன் இராவணனுடைய ஆதிக்கத்தில் இருந்து சீதையை மீட்பதற்கு வாலியின் துணையைப் பெற்றிருக்க ஒரு சந்தர்ப்பம் இருந்தது. சுக்ரீவனை விடவும் ஆற்றல் உடையவன் வாலி. இராவணேசுவரனையே அவன் தன் வாலால் அடக்கியவன். இது இராமனுக்குத் தெரிந் திருந்தும், வாலியின் துணையை அவன் பெறாததற்குக் காரணம் உண்டு. அது, வாலி தன் தம்பி சுக்ரீவன் மனைவியை அபகரித்துக் கொண்டவன் என்பதுதான், இதனை "வாலிவதைப் படலத்"திலே,

"தருமம் இன்னது எனும்
தகைத் தன்மையும்,
இருமையும் தெரிந்து,
எண்ணலை; எண்ணிளுல்,
அருமை உம்பிதன்
ஆருயிர்த் தேவியை,
பெருமை நீங்கினை,
எய்தப் பெறுதியோ!"

என்று வாலியை இராமன் கேட்பதனுல் அறிகிருேம்.

## அடிகளின் தனிப்பெருமை

இந்த ஆண் கற்பைத் தம் வாழ்க்கையிலே காந்தியடிகள் கடைப்பிடித்தார். அதிலே அடிகள் இராமனின் அடிச்சுவட்டில் நடைபோட்டு வாழ்ந்தார் என்பதில் ஐயமில்லை.

அடிகள் பாரிஸ்டர் படிப்புக்காக பரங்கியர் நாடு சென்றபோது, தன் அன்னைக்குக் கொடுத்த மூன்று உறுதிமொழிகளிலே ஒன்று, தன் கற்பைக் காப்பது என்பதாகும். இலண்டன் வாழ்க்கையிலே தனது கற்புக்குச் சோதனை வந்த நேரத்திலும், அன்னைக்குத் தந்த உறுதிமொழியை நினைவில் கொண்டு, அந்தச் சோதனைகளிலிருந்து அடிகள் தேறினுர். இதனை, "சத்திய சோதனை" என்று அவர் குறிக்கின்றுர்.

இராமனைப் போன்றே தன் மனைவியைத் தவிர இன்னெருத்தியைத் தன் நெஞ்சாலும் நினையாத ஆண்

கற்பைக் காந்தியடிகள் கடைப்பிடித்தார். அதையே உலக மக்களுக்கும் போதித்தார்.

## தவ வாழ்வும் சிறை வாழ்வும்

இராமன், தன் சிற்றன்னை கைகேயியின் ஆணைப்படி "வானப்பிரஸ்த" நிலையை மேற்கொண்டு, 14 ஆண்டுக் காலம் வனவாசம் செய்தான். அந்த வானப் பிரஸ்த வாழ்க்கையிலேயும் 13 ஆண்டுக் காலம் அவனு டன் சேர்ந்து வாழும் சிறப்பினைச் சீதை பெற்றாள். ஆம்; இன்ப - துன்பங்களிலே இணைபிரியாது இருந்த உத்தமத் தம்பதிகளாக அவர்களைக் கம்பர் காட்டுகின்றார்.

அதே நிலையில் காந்தி - கஸ்தூரிபாய் தம்பதிகளை யும் உலகம் கண்டது. ஐயன் சிறை புகுந்த போதெல் லாம் அன்னையும் சிறைக்கேகினார். இறுதியாக, ஆகஸ்டுக் கிளர்ச்சியின்போது அண்ணல் காந்தியும், அன்னை கஸ்தூரிபாயும் ஆகாகான் மாளிகையில் சேர்ந்திருந்தே சிறைத் துன்பத்தை அனுபவித்தனர்.

சிறைபுகுந்த அரசியல் தம்பதிகளிலே இந்த வாழ்வு வேறெந்தத் தம்பதிகளுக்கும் வாய்த்ததில்லையல்லவா! ஆனால், இராவணனால் சீதை சிறை வைக்கப்பட்டபோது அவளுடன் சேர்ந்திருக்க இராமனுக்கு இலங்கை வேந்தன் வாய்ப்புத் தரவில்லை; தந்திருக்கவும் முடியாது. ஆம்; கதையின் போக்கு அப்படி! ஆனால், அன்னியக் கொடுங்கோலாட்சி, காந்தி தம்பதிகளை ஒரே சிறையில் சேர்த்து வைத்தது.

**பகைவனுக்கும் அருளுதல்**

கம்பர் கண்ட இராமன் பகைவனுக்கும் அருள் செய்கின்றான். தன்னுடன் போர் செய்யும் இராவணன் கைவாளை யிழந்து நிராயுதபாணியாக நிற்கும்போது, "இன்று போய், போர்க்கு நாளை வா" என்கிறான். பகைவனுக்கு அருளும் இந்த நன்னெஞ்சை காந்தி யடிகளிடமும் கண்டோம்.

இரண்டாவது உலகப் பெரும் போர் தோன்றிய போது, சுபாஷ் சந்திரபோஸ் போன்ற தீவிரவாதிகள், "பிரிட்டனை எதிர்த்து விடுதலைப் போர் தொடங்க இது தான் தருணம்" என்றனர். பிரிட்டனுக்குப் பகை நாடான ஜெர்மனியின் உதவியைப் பெறவேண்டு மென்றும் கூறினர்.

அப்போது காந்தியடிகள், "உலகப் போரினால் லண்டன் வெஸ்ட்மினிஸ்டர் அபே கட்டிடம் இடிந்து விழுமானால், அழகிய பாரிஸ் நகரம் பற்றி எரிந்து சாம்பலாகுமானால், என் உடம்பெல்லாம் வாயாகக் கொண்டு அழுவேன். போர்க்காலத்தில் நான் அரசாங்கத்தைப் பலவீனப்படுத்தும் செயல் எதிலும் ஈடுபடமாட்டேன்" என்று கூறினார்.

இராவணனிடம் இராமன், கருணை காட்டியது, தன் சொந்தப் பிரச்சினையிலே! ஆம்; தன் மனைவியைச் சிறைப்படுத்திய பகைவனிடம் கோசலைச் செல்வன் கருணை காட்டினான். காந்தியடிகளோ, 30 கோடி மக்களை ஏகாதிபத்திய மென்னும் சிறையில் வைத்த

பகைவனிடம் கருணை காட்டினார்! தனது கருணைக்கு தேச மக்களின் இசைவையும் பெற அவரால் முடிந்தது!

### ஒரு சிறப்பு

இராமன்கூட, இலங்கை வேந்தனை வீழ்த்தி வெற்றி காண கிஷ்கிந்தை வேந்தனின் துணையைப் பெற்றான். காந்தியடிகள், பிரிட்டனை வீழ்த்தி பாரதத்திற்கு விடுதலை தேடும் போரிலே, அன்னிய நாடு எதனுடைய உதவியையும் பெறாத புனிதப் போர் முறையைக் கடைப் பிடித்தார்.

3

# கம்பரும் மதுவிலக்கும்

### கம்பர் காலத்திலே

“கம்பர் வாழ்ந்தது 12ஆம் நூற்றுண்டில். அவர் காலத்திலே மதுவிலக்குச் சட்டம் இந்தியாவின் எந்தப் பகுதியிலும் அமுலில் இல்லை. ஆகவே, கம்பர் மது விலக்குப் பற்றி ஆதரவாகவோ, எதிராகவோ எதுவும் சொல்லச் சந்தர்ப்பம் ஏது?” என, “கம்பரும் மது விலக்கும்” என்னும் தலைப்பைப் பார்த்ததும் வாசகர்கள் நினைக்கலாம்.

### சட்டமும் சாத்திரமும்

உண்மையில் கம்பர் காலத்தில் மதுவுக்கு, எதிராக நாட்டில் சட்டம் இல்லைதான். ஆனல், சாத்திரம் இருந்தது. அது, இந்நாளைய சட்டத்தை விடவும் வலிமை வாய்ந்தது.

உண்மையில் குடிப் பழக்கத்திற்கு எதிராக முதன் முதலில் சாத்திரம் பிறந்தது தமிழ்நாட்டில்தான் - தமிழிலேதான்!

**'தமிழா, குடிக்காதே!'**

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் மதுப் பழக்கத்தைத் தடுக்க சாத்திரம் பிறந்துவிட்டது! 'சாத்திரம்' என்று சொன்னேனு, அது தவறு; 'வேதம் பிறந்துவிட்டது' என்று சொல்ல வேண்டும். ஆம்; தமிழருக்கு வேதம் திருக்குறள் தானே!

அந்தத் திருக்குறள் கூறுகிறது, 'குடிப்பது குற்றம்' என்று. அது, மன்னிக்க முடியாத குற்றம் என்றும் கூறுகிறது. எதையும் மன்னிப்பவள் தாய். அந்தத் தாய்கூட, 'குடிக்கும் மகனை மன்னிக்க மாட்டாள்; மன்னிக்க கூடாது' என்கிறது வள்ளுவர் வகுத்த சட்டம்! "ஈன்ருள் முகத்தேயும் இன்னுது"-அதாவது, குற்றங்களை மன்னிக்கும் தாயும் மன்னிக்க முடியாதது மதுப்பழக்கம் என்கிறது.

குடிக்கவும் அனுமதிக்கிறது வள்ளுவர் சட்டம், ஒரு நிபந்தனையோடு! அதாவது, "சான்ருேரால் தான் மதிக்கப்பட வேண்டும் என்று விரும்பாதவன் எவனே, அவன் குடித்துத் தொலையட்டும்" என்கிறது.

"உண்ணற்க கள்ளை" என்று சொன்ன வள்ளுவர், திரும்பவும், "உண்ணுக" என்றும் சொல்கிருர். குடிப் பவனைச் சான்ருேர்கள் பாராட்ட மாட்டார்களாம்! ஏன், பழிக்கவும் செய்வார்களாம்! அதனுல் சொல்லுகிருர், 'குடியடா, மகனே! குடி! சான்ருேரால் பாராட்டப்படு

வதை விரும்பாவிடில், குடி! குடித்துத் தொலை!'' என்கிருர் குறளாசிரியர்.

'எவனொருவன் குடிப் பழக்கத்தை மேற்கொள்ளு கிருனே, அவன் செத்தாருள் வைக்கப்படுவான்' என்கிருர் அவர். 'என்று குடிக்கத் தொடங்குகிருனே, அன்றே அவன் செத்தான்' என்கிருர் வள்ளுவர்.

இவ்வளவுஞ் சொல்லி, இந்தக் கொடிய பழக்கத்தை நாட்டிலிருந்தே ஒழிப்பது அரசின் கடமை என்பதை உணர்த்த விரும்பி, ''கள்ளுண்ணுமை'' என்ற அதி காரத்தை பொருட்பாலில் வைத்தார் வள்ளுவர். அதனுல் அதனைச் 'சட்டம்' என்கிறேன். மது ஒழிப்புச் சட்டம் தமிழர் வேதமான திருக்குறள்.

## முதலும் வழியும்

வடமொழியிலுள்ள வேதத்தின் வழி வந்தது ஆகமம். வேதத்தை விடவும் ஆகமத்திற்கே அதிக மதிப்புண்டு இந்துக்களிடையிலே! அதுபோல, மதுவிலக்குப் பற்றிய வேதம் திருக்குறள் என்ருல், அதையொட்டி வந்த ஆகமம் சிலப்பதிகாரம்!

## *சிலம்பிலும் மதுவுக்கு எதிர்ப்பு!*

சிலம்பிலே, மக்கள் கள் விற்பதும் குடிப்பதும் கூறப் படுகின்றது, நிகழ்ச்சிப் போக்கில்! நாகரிகமற்ற எயினர் கள் குடித்துவிட்டுக் கூத்தாடுவது காட்சிப்படுத்தப்படு கிறது. ஆனுல், அதே சிலப்பதிகாரத்தின் இறுதியில், கவிக் கூற்ருக,

"கள்ளும் களவும்
காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும்
விரகினில் ஒழிமின்"
— சிலம்பு. 30; 197 - 98

என்று கூறுகிறார், இளங்கோவடிகள்.

"மல்லன்மா ஞாலத்து வாழ்வீர்!" என்று குரல் கொடுத்து உலகோர் அனைவரையும் கூவி அழைத்து, கள்ளுண்ணல் உள்ளிட்ட பஞ்சமா பாதகங்களையும் ஒழிக்குமாறு வேண்டுகின்றார்! ஐந்து பாதகங்களிலே கள்ளுக்கே முதன்மை தந்திருக்கிறார்!

வேதத்தை அடுத்தது ஆகமம் என்றால், அதனை அடுத்தது சாத்திரம் என்பர் சமயவாதிகள். அதுபோல, திருக்குறள் வேதத்தையும் சிலப்பதிகார ஆகமத்தையும் அடுத்து கம்பராமாயண சாத்திரமும் குடிப் பழக்கத்தை எதிர்க்கிறது. இதில் ஒரு வகையில் திருவள்ளுவரிட மிருந்தும் இளங்கோவிட மிருந்தும் கம்பர் வேறு படுகின்றார்.

குடிப்பழக்கம் நாட்டில் இருப்பதை ஒப்புக்கொண்டு, அதன் கேடுகளை விளக்கி, அதனை விற்போரையும் குடிப் போரையும் காட்டிவிட்டு, பின்னர் குடிப்பழக்கத்தை ஒழிக்குமாறு இளங்கோ கூறுகின்றார். கம்பரோ, குடிப்பழக்கமே இல்லாத பாரத நாட்டைக் காட்டு கின்றார், தமது இராமாயணத்திலே!

### மதுவருந்தாத இராமன்

வான்மீகியிலே வரும் இராமன் குடிப் பழக்க முடையவன். ஆனால், கம்ப ராமாயணத்திலே அவன்

குடிப்பழக்கத்தை விட்டுவிடுகிருன். தமிழ்நாடு - தமிழர் நாகரிகம் குடிப்பழக்கத்திற்கு எதிரானது என்பது கம்பரது நம்பிக்கை. அதனுல், வான்மீகியிலே குடிப் பழக்கமுடைய இராமன், கம்பனிலே குடியொழித்த இராமனுகக் காட்சியளிக்கின்ருன். தெய்வமே மானிடனுக வந்தாலும், அவன் குடிப் பழக்கமுடையவனுனுல் தமிழ் நாட்டில் நடமாட முடியாது என்று கம்பர் சொல்லாமல் சொல்லுகிருர்.

இராவண வதம் முடிந்து, சீதை மீட்கப்பட்டு, அவள் ராமன் எதிரே வந்து நிற்கும்போது, அவளை அவன் ஏற்க மறுக்கிருன். அதற்கு அவன் சொல்லும் காரணங்களுள் ஒன்று, அவள் இலங்கையில் இருந்த காலத்திலே குடிக்கப் பழகியிருப்பாள் என்பதாகும். 'இலங்கையில் நீ மது அருந்தியதோடன்றி, அதனை எங்களுக்கும் விருந்து வைக்க வந்தனையோ' என்கிருன் இராமன்.

## குடிகாரன் சுக்ரீவன்

கம்பர், தமது காப்பியம் முழுவதிலும் அரக்கரிடமும் குரக்கரிடமுமன்றி, மற்றுள்ள மானிடரிடம் மதுப் பழக்கத்தைக் காட்டவில்லை. குரக்கர் நாகரிகமற்ற வராதலால், கிஷ்கிந்தையிலே அவர்களிடம் குடிப் பழக்கம் இருந்ததைக் காட்டுகிருர். ஏன், குரக்கர் குலத்தவனும் கிஷ்கிந்தை மன்னனுமான சுக்ரீவனே குடித்துவிட்டு நினைவிழந்து கிடப்பதாகக் கூறுகிருர்.

அதுபோல, கொடிய குணங்கள் எத்தனையுண்டோ அத்தனையையும் கடைப்பிடிக்கும் அரக்கர்களிடமும் குடிப்பழக்கமுண்டு என்பதனை, இலங்கை வேந்தன் தம்பியான கும்பகருணனைக் கொண்டே காட்டுகிருர்.

மற்றபடி, அயோத்தி, மிதிலை ஆகிய நகரங்களிலே, குறிப்பாக, மானிடர்களிடையிலே குடிப் பழக்கத்தைக் கம்பர் காட்டவில்லை.

### உண்டாட்டுப் படலம்

பாலகாண்டம் உண்டாட்டுப் படலத்தில், மிதிலை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் தயரதன் கூட்டத்தாரிடை குடிப்பழக்கத்தைக் காண்கிறோம்.

“இந்தப் படலம் இராமாயணக் கதைக்குத் தேவையற்றது” என்கிறார், மகரிஷி வ. வே. சு. ஐயர். “இந்தப் படலம் கம்பர் பாடியதல்ல, இடைச்செருகல்” என்கிறார், ரசிகமணி டி. கே. சி.

### யாரோ உண்டாக்கிய படலம்

உண்மையில், இந்த ஒரு படலத்தில் தவிர நாகரிக மனிதர்கள் குடிப் பழக்கத்தைக் கொண்டிருந்ததற்குக் கம்ப ராமாயணத்தில் வேறெங்கும் சான்றில்லாததால், உண்டாட்டுப் படலம் இடைச் செருகல் என்றே சொல்லி விடலாம்.

### கம்பர் சிறப்பு

தாம் காண விரும்பிய நல்ல நாட்டைக் கம்பர், தமது இராமாயணத்திலே கற்பித்துக் காட்டுகிறார். ஆம்; கொடுப்பாரும் கொள்வாரு மில்லாத நாட்டைக் காட்டு கிறார். அதுபோல, குடிப்பாரும் குடி விற்பாருமில்லாத நாட்டையும் ‘கம்பனி’லே காண்கின்றோம்.

சுக்ரீவன் வாயிலாகக் கம்பர் மதுவிலக்குப் பிரசாரத்தில் ஈடுபடுகிருர், கிஷ்கிந்தைப் படலத்திலே! அண்ணன் வாலியானவன் தன் தம்பி சுக்ரீவனுக்குக் குடிப்பழக்கம் உண்டென்பதை ஒப்புக்கொள்கிருன். குடிபோதையில் அவன் கடமை தவறக் கூடியவன் என்பதையும் இராமனுக்கு உணர்த்துகின்ருன். அந்தச் சமயத்தில் தனக்கு விட்ட இராம பாணத்தைத் தன் தம்பிக்கு விடுவதில்லை என்று உறுதி கூறுமாறும் வாலி இராமனை வேண்டுகின்ருன்.

'ஓவிய உருவ! நாயேன்
    உளதொன்று பெறுவ துன்பால்;
பூவியல் நறவ மாந்தி
    புந்திவேறு உற்ற போழ்தில்
தீவினை இயற்று மேனும்
    எம்பி மேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும்
    கூற்றினை ஏவல்' என்ருன்.

இது, கம்பர் வாக்கு. இதிலே 'பூவியல் நறவம்" என்று கம்பர் குறிப்பிடுவது போதைதரும் மதுவைத்தான்! வாலி ஐயுற்றது போல, குடி போதையால் கடமை தவறினன் சுக்ரீவன். கார்காலம் கடந்ததும் சீதையைத் தேடுவதற்குரிய நடவடிக்கைகளை எடுப்பதாக இராமனிடம் கூறிவிட்டு கிஷ்கிந்தைக்குள் புகுந்த சுக்ரீவன், மது போதையால் அதனை மறந்து விடுகிருன். அந்த நேரத்தில் இராமனுல் அனுப்பப்பட்டு ஆற்ருெணுச் சினத்துடன் கிஷ்கிந்தையில் பிரவேசிக்கிருன் இலக்குவன்.

அங்கதனுல் இலக்குவனின் வருகையை அறிந்த சுக்ரீவன் தனது தவறுக்கு வருந்துகிருன். இதனை ஒரு

வாய்ப்பாகக் கொண்டு, ஒன்பது செய்யுட்களில் மது விலக்குப் பிரசாரம் செய்கிறார் கம்பர்.

கம்பர் விரும்பி யிருந்தால், சுக்ரீவன் குடி போதையி லிருந்த நிலையை மிக விரிவாக வருணித்திருக்கலாம். அவர் அப்படிச் செய்யவில்லை.

குரக்கர் தலைவன் குடிபோதையி லிருந்ததையே சுவை பட வருணிக்க விரும்பாதவர், நாகரிகத்தில் சிறந்த அயோத்தி நகர மாந்தர் குடித்து மகிழ்ந்தார்கள் என்று 57 செய்யுட்களில் உண்டாட்டுப் படலத்தில் வருணிப் பாரா?

**மதுவிலக்குப் பிரசாரம்**

சுக்ரீவன் குடிப் பழக்கத்தால் வரும் கேடுகளை விவரித்துரைப்பதைக் கேட்போம்:

'உறவுண்ட சிந்தையானும் உரை செய்வான்;
ஒருவற்கு இன்னம்
பெறல் உண்டோ, அவரால் ஈண்டு
யான் பெற்ற பேர் உதவி? உற்றது
இறல் உண்டோ? என்னின் தீர்வான்
இருந்தபே ரிடரை எல்லாம்
நறவுண்டு மறந்தேன்; காண
நாணுவல், மைந்த!' என்றான்.

'இராமன் செய்த பேருதவியை மதுப் போதையால் மறந்தேன்' என்கிறான் சுக்ரீவன். இப்படி அவன் சொல்வது தன் மைந்தன் அங்கதனிடம்.

மது மயக்கத்தால் ஏற்படும் ஒழுக்கக் கேடுகளையும் சுக்ரீவனைக் கொண்டு சொல்ல வைக்கிறார் கம்பர்.

'ஏயின இது அலால், மற்று,
ஏழைமைப் பாலது என்றோ?
'தாய் இவள், மனைவி' என்னும்
தெளிவு இன்றேல், தருமம் என்னும்?
தீவினை ஐந்தின் ஒன்று ஆம்;
அன்றியும், திருக்கு நீங்கா
மாயையின் மயங்குகின்றும்;
மயக்கின் மேல் மயக்கும் வைத்தாம்.'

இந்தக் கவிதையிலே, 'குடியால் அறிவை இழந்தவனுக்குத் தாய்க்கும் தாரத்திற்கும் வேற்றுமை தெரியாது' என்கிறான் சுக்ரீவன். 'இந்த ஒழுக்கக்கேடு உலகில் வளருமானால், அப்புறம் தருமத்தின் கதி என்ன ஆகும்?' என்றும் கேட்கிறான் கிஷ்கிந்தை மன்னன். மற்று, குடியானது பஞ்சமா பாதகங்களுள் ஒன்று என்பதனை "தீவினை ஐந்தின் ஒன்று ஆம்" என்னும் வாசகத்தில் கூறுகின்றான்.

மதுவிலே நெளியும் புழுவை எடுத்தெறிந்து விட்டு அதனைக் குடிக்கும் இழி செயலை,

"நெளிந்து உறை புழுவை நீக்கி,
நறவு உண்டு நிறைகின்றேனல்"

என்ற வரிகளில் சுக்ரீவன் வருணிக்கிறான்.

"கள்ளுண்ட மயக்கத்தால் கேடு வரும் என்று நான் கேள்விப்பட்டதுண்டு. அதனை இப்போது அனுபவத்தின் வாயிலாக அறிந்து கொண்டேன்" என்கிறான் சுக்ரீவன்.

"கேட்டனென், 'நறவால் கேடுவரும்' என;
கிடைத்த அச்சொல்
காட்டியது"

என்பது சுக்ரீவன் சொல்.

**சுக்ரீவன் சூளுரை**

மது போதையால் வரும் கேடுகளை மேலும் விளக்கு கிருன், கம்பர் கைப்பட்ட சுக்ரீவன்.

'வஞ்சமும் களவும் பொய்யும்
மயக்கமும் மரபில் கொட்பும்
தஞ்சம் என்ருரை நீக்கும்
தன்மையும், களிப்பும், தாக்கும்;
கஞ்சமெல் அணங்கும் தீரும்,
கள்ளினுல்; அருந்திஞரை
நஞ்சமும் கொல்வது அல்லால்,
நரகினை நல்காது அன்றே?'

இத்துடன் மதுவிலக்குப் பிரச்சாரத்தை முடித்துக் கொண்டு, குடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட தாக சுக்ரீவன் பிரகடனம் செய்கிருன்.

'ஐய! நான் அஞ்சினேன், இந்
நறவினின் அரிய கேடு;
சையினுல் அன்றியேயும்
கருதுதல் கருமம் அன்ருல்;
வெய்யதாம் மதுவை இன்னம்
விரும்பினேன் என்னின், வீரன்
செய்ய தாமரைகள் அன்ன
சேவடி சிதைக்க என்ருன்'

இந்தச் செய்யுளிலே, 'இனி மது அருந்த மாட்டேன்' என்று சுக்ரீவன் சூளுரைக்கிருன். "அருந்திஞல் இலக்குவனுடைய கால்கள் என்னை மிதித்துக் கொல் லட்டும் என்றும் சொல்லுகிருன்.

**கம்பர் திறம்**

சுக்ரீவனைப் பயன்படுத்தி கம்பர் மதுவிலக்குப் பிரச்சாரம் செய்வது போல, வேறு எந்தக் காப்பியத்திலும், தமிழ்க் கவிஞரிலே எவரும் இவ்வளவு தீவிரமாக மது விலக்குப் பிரச்சாரம் செய்ததில்லை.

கும்பகருணன் குடித்து மகிழ்வதைக் கூறுமிடத்து, ஒரு செய்யுளிலே, அதிலும் ஒரு வரியிலே, அந்த வரியிலும் ஒரு சொல்லிலே அதைச் சுட்டிக் காட்டுகிறார் - அவ்வளவுதான். அதற்குமேல் வருணிக்க முயலவில்லை. மது உண்டு மயங்கியோர் நிலையை விரிவாக வருணிப்பது கூட, அதிலே ஒரு கவர்ச்சியை உண்டாக்குவதாகு மல்லவா! அதனால்தான் சுக்ரீவனிடமோ, கும்பகருண னிடமோ வருணனையை கம்பர் வைத்துக் கொள்ள வில்லை.

**கும்பகருணனும் குடிகாரனே!**

ஆழ்ந்த உறக்கத்திலிருந்து எழுந்த கும்பகருணன் சீதையை விட்டுவிடும்படி அண்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறுகிறான். அதுகேட்டுச் சினங்கொண்ட இலங்கை வேந்தன்,

"உறுவது தெரிய அன்று,
உன்னைக் கூயது;
சிறுதொழில் மனிதரைக்கோறி,
சென்று; எனக்கு
அறிவுடை அமைச்சன் நீ
அல்லை, அஞ்சினை;
வெறுவிது, உன்வீரம்' என்று
இவை விளம்பினான்."

"மறம்கிளர் செருவினுக்கு
உரிமை மாண்டனை:
பிறங்கிய தசையொடு
நறவும் பெற்றனை;
இறங்கிய கண்முகிழ்த்து
இரவும் எல்லியும்
உறங்குதி போய்' என
உளையக் கூறினன்"

"நிறைய புலாலையும் போதை தரும் மதுவையும உண்ட நீ, போருக்குப் போவாயா? மாட்டாய். இன்னும் புலாலை உண்டு, மதுவை அருந்திவிட்டுத் தூங்கு, போ!" என்று இராவணன் சொன்னான். இந்த அளவிலே கும்பகருணனின் குடிப் பழக்கத்தைச் சுட்டிக் காட்டுவதோடு கம்பர் விட்டுவிடுகிறார்.

இதையும் ஓர் சான்றாக் கொண்டால், உண்டாட்டுப் படலத்தில் 57 செய்யுட்களிலே அயோத்தி வேந்தனின் பரிவாரத்தார் மது அருந்தி, அதனால் அறிவிழந்து, காம வெறி பிடித்து ஆடுவதாக வருணிக்கப்படுகிறதே, அந்த வருணனை கம்பருடையதாக இருக்க முடியுமா? இருக்காது. அது, ரசிகமணி டி. கே. சி. யும், வ. வெ. சு. ஐயரும் கூறுவதுபோல இடைச் செருகலாகத்தான் இருக்க முடியும்.

கம்பர் மது அருந்துவோர் இல்லாத கோசல நாட்டைத்தான் நமக்குக் காட்டுகிறார். இராமனைப் பெற்ற நாடு வேறு எப்படி இருக்கும்?

4

# கம்பரிலேயும் கட்சிமாறிகளா?

## அரசியல் காப்பியம்

கம்பராமாயணம் அப்பட்டமான ஓர் அரசியல் காப்பியம். கம்பர் காட்டும் அரசியலிலே நல்லோரையும் காண்கிறோம்; தீயோரையும் பார்க்கிறோம். அறத்திற்கும் மறத்திற்குமான போராட்டந்தானே இராமாயணம்! அந்தப் போராட்டத்திலே கட்சி மாறிகளையும் காணத்தானே வேண்டும்—காண்போம்!

## கட்சி மாறிகள்

கம்பனிலே இரு அரசியல் வாதிகளைக் கட்சி மாறிகளாக இலக்கிய உலகம் கருதுவதற்குக் காரணம் உண்டு. அவர்கள் சுக்ரீவனும் வீடணனும் ஆவர்.

சுக்ரீவனைக் கட்சி மாறியாகக் கருதுவது ஒரு மயக்கம் தான்! ஆராய்ந்து பார்த்தால், அவன் கட்சி மாறியல்ல!

ஆனால் வீடணன் கட்சி மாறினான். அவன் கட்சி மாறியது, புகழத்தக்கதா, இகழத்தக்கதா - என்பது வேறு விஷயம். ஆனால், அவன் கட்சிமாறினான் என்பதில் இரண்டு அபிப்பிராயம் இருப்பதற்கு நியாயம் இல்லை.

சுக்ரீவன், தன் அண்ணன் வாலியைக் கொல்வதற்கு, அன்னியனான இராமனின் உதவியை நாடுகிறான். இதைக் கொண்டே அவனைக் கட்சி மாறியாகக் கருதி விடுவதற்கில்லை. சுக்ரீவன் தானே இராமனைத் தேடிப் போகவில்லை. சபரியின் ஆலோசனையைக் கேட்டு, இராமனே சுக்ரீவனைத் தேடிச் செல்கிறான்!

முதன் முதலில் இராமன் அனுமனைச் சந்தித்த போது, சுக்ரீவன் எங்கிருக்கிறான்? அவனிடம் செல்ல வழி காட்டு' என்றுதான் கூறுகிறான். இதனை,

"எவ்வழி இருந்தான், சொன்ன
கவிக்குலத்து அரசன்? யாங்கள்
இவ்வழி நின்னை உற்ற
எமக்கு நீ நன்று சொன்ன
செவ்வழி உள்ளத்தோனைக்
காட்டுதி, தெரிய என்றான்"

என்ற கம்பர் வாக்கால் அறிகிறோம். ஆனால், அனுமன் இராமனிடம் தனக்குள்ள பக்தியால் அவனிடம் சுக்ரீவனை அழைத்துச் செல்கிறான்.

வீடணனின் நிலை இதுவல்ல. அவன், தானாகவே வலுவில் சென்று இராமனிடம் அடைக்கலம் புகுகிறான்.

சுக்ரீவன், தன் அண்ணன் வாலி தனக்குச் செய்த கொடுமை காரணமாக, கிஷ்கிந்தை இளவரசனாக

இருந்தும் அரண்மனையில் வாழ இயலாதவனாகிவிட்டான் அத்துடனன்றி, தன் மனைவியையும் அண்ணன் வாலி அபகரித்துக் கொண்ட நிலையிலே தனிமையானான். அதற்கு மேலும், நாட்டில் நடமாடவும் அனுமதிக்க வில்லை வாலி. அதனால் ஒரு மலைக் குகையில் மறைந்து வாழலானான். ஒரு சாபம் காரணமாக அந்தக் குகையுள் புக முடியாதவனாக வாலி இருந்தான். அதனால் உயிர்ப் பிச்சை பெற்றவனாகி, மற்றுள்ள மனித உரிமைகள் அனைத் தையும் இழந்தான் சுக்ரீவன்.

இந்த நிலையில் சுக்ரீவன் வைக்கப்பட்டதற்குக் காரணம், அவன் மீது வாலிக்கு ஏற்பட்ட ஓர் ஐயந்தான்!

...

உடன்படிக்கை

சுக்ரீவனுக்கும் இராமனுக்கும் உடன்படிக்கை ஏற்படுகிறது. அது, சம அந்தஸ்தில் ஏற்படுவதாகும். உடன்படிக்கையின் வாசகத்தை இராமனே வெளியிடு கின்றான்.

"உன் தனக்கு உரிய இன்ப
துன்பங்கள் உள்ள, முன்நாள்
சென்றன போக, மேல்வந்து
உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்கும் நேர்."

"மற்று, இனி உரைப்பது என்னே?
வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்;
தீயரே எனினும் உன்னோடு

உற்றவர் எனக்கும் உற்ருர்;
உன்கிளே எனது, என் காதல்
சுற்றம், உன்சுற்றம்; நீ என்
இன்உயிர்த் துணைவன்''...

என்பது இராமன் புகன்ற உடன்படிக்கை வாசகம்.

இராமனுக்கும் சுக்ரீவனுக்கும் நடந்த உரையாடலிலே,

''இக்குன்று
அரண் உடைத்து ஆகி வந்தேன்;
ஆருயிர் துறக்க லாற்றேன்;
சரண்டணேப் புகுந்தேன்; என்ணேத்
தாங்குதல் தருமம்...''

என்கின்ருன், சுக்ரீவன். இதிலுள்ள ''சரண்'' என்னுஞ் சொல் 'நட்புக் கோட் படலம்' என்னும் தலேப்புக்கேற்ப, ''நட்பு'' என்றே பொருள் தரும்.

இவ்வளவு மோசமான ஒரு நிலேயில்தான் வாலிக்கு எதிராக இராமனுடைய உதவியை சுக்ரீவன் நாட வேண்டியதாயிற்று.

### மனேவியைப் பிரிந்தவர்

சுக்ரீவனும் இராமனும் சம நிலேயில்தான் வைக்கப் பட்டிருக்கின்றனர் ''கம்பனி''லே. ஆம்; இராமன் இராவணனிடம் தன் பத்தினியைப் பறி கொடுத்தவன்! சுக்ரீவனே, வாலியிடம் தன் மனேவியைப் பறி கொடுத் தவன். இருவர் நிலேயும் சமம்தானே!

இதனால் சீதையை மீட்க இராமனுக்கு சுக்ரீவன் உதவி தேவைப்பட்டுவிட்டது. அதுபோல, தன் மனைவி "ருமை" என்பவளை வாலியிடம் இருந்து மீட்க இராமனுடைய உதவி சுக்ரீவனுக்குத் தேவைப்பட்டு விட்டது. இந்நிலையில்தான் அவர்கள் ஒருவரையொருவர் சந்தித்து உறவு கொள்கின்றனர். இது, கொள்கை ரீதியிலான உறவு— உடன்பாடுதானே!

இன்னொரு முறையும் சொல்கிறோம், சுக்ரீவன் இராமனின் உதவியைப் பெற்றது வாலியைப் பழி வாங்க அல்ல; அவனிடமிருந்து அரச பதவியைக் கைப்பற்றவும் அல்ல; மாறாக, தன் மனைவியை வாலியிடமிருந்து மீட்பதற்காகத்தான்!

### நல்ல மனமாற்றம்

வாலி மாண்ட பின் சுக்ரீவன் கிஷ்கிந்தையின் மன்னன் ஆவது இயற்கையாக நிகழ்வதாகும். ஏன்? மரணப் படுக்கையிலிருந்து, "என் மகன் அங்கதனை இளவரசனாக்கி, நீ அரசபதவியை ஏற்றுக்கொள்!" என்று வாலியே சுக்ரீவனுக்கு ஆலோசனை கூறுகிறானல்லவா!

வாலி மாளவிருந்த நேரத்திலேதான் தன் தம்பி சுக்ரீவன் செய்த தவறை மன்னித்து விடுகிறான். சுக்ரீவனும் நேர்ந்து விட்ட தவறுக்கு வருந்துவோனாகி, அண்ணனுடைய முடிவுக்காக அழுது புலம்புகிறான்.

### இரு வேறு நிலைகள்

"கம்பனி"லே சுக்ரீவன் நிலை வேறு; வீடணன் நிலை வேறு! இதனாற்றான், சுக்ரீவனும் இராமனும் சந்திக்கும்

நிகழ்ச்சிக்கு "நட்புக்கோட் படலம்" என்று பெயர் தந் திருக்கிருர், கம்பர்.

மாருக, வீடணனும் இராமனும் சந்திக்கும் நிகழ்ச் சிக்கு, "வீடணன் அடைக்கலப் படலம்" என்று பெயர் தந்திருக்கிருர். இந்த இரு வேறு படலங்களின் பெய ரிலுள்ள மாறுதலே, அந்த இரு வேறு பாத்திரங்களின் குண வேறுபாடுகளைக் காட்டுவதாகும்.

**அரசியல் வரலாறு**

சுக்ரீவன் செயல் குறையுடையதாக இருக்கலாம். ஆனால், அரசியல் வரலாற்றிலே, அது புதுமையல்ல!

ஓர் அரசனுடைய மக்களாகப் பிறந்த இருவரிலே ஒருவன் அரியாசனத்தை ஆக்கிரமித்துக் கொள்வாஞ ஞல், அவனுடைய உடன்பிறப்பான மற்ருெருவன் அன் னிய அரசனின் துணை பெற்றுப் போர் செய்தோ செய்யா மலோ ஆட்சியைக் கைப்பற்றுவது மன்னர் குலத்தின் வரலாருகும்.

இன்றைய அரசியற் கட்சிகளிடையிலும் இதுபோன்ற காட்சிகளைக் காண்கிருேம் அல்லவா! ஒரு கட்சியானது, தன்னிலிருந்து பிரிந்து சென்ற-கொள்கையளவில் தன்னில் ஒரு கூறு ஆகிய - கட்சியை அழிப்பதற்கு, பாரம்பர்ய வேறுபாடுடைய இன்னெரு கட்சியின் துணையைப் பெறு வது இன்று 'அரசியல்' ஆகிவிட்டதல்லவா! அரசியல் சட்டமும் இதை ஆதரிக்கிறது அல்லவா!

**மனைவிக்கு மீட்சி**

இதுபோன்றது தான், அண்ணன் வாலியிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்ற, கிஷ்கிந்தை இளவரசனை சுக்ரீ

வன், கோசல மன்னனான இராமனின் துணையைப் பெற்ற நிகழ்ச்சி. சுக்ரீவனுடைய குறிக்கோள், ஆட்சியைப் பெறுவதல்ல; மனைவிக்கு மீட்சி தருவதுதான் என்றாலும், ஆட்சியைக் கைப்பற்றிய நிகழ்ச்சியையும் காண்கிறோம் அல்லவா!

அண்ணனை வீழ்த்துவதற்கு அன்னிய மன்னன் ஒருவனின் துணையைப் பெற்ற அளவுக்கு சுக்ரீவன் அறவழிப்பட்ட அரசியல்வாதி அல்லன் என்றால், அதனை மறுப்பதற்கில்லை. ஆனால், "கீழ்த்தரமான கட்சி மாறி" என்று சுக்ரீவனைச் சொல்வதற்கில்லை.

**வீடணன்**

இனி, வீடண பாத்திரத்தைப் பார்ப்போம்.

கம்பராமாயணத்திலே, அண்ணன் இராவணனைக் கைவிட்டு அன்னியனான இராமனுடன் வீடணன் சேர்ந்து கொள்ளுகிறான். இவனை, 'மேதாவிகட்கெல்லாம் மேதாவி' என்று வருணிக்கிறார் கம்பர்.

**அடைக்கலமா? சரணாகதியா?**

உண்மையில் வீடணன் கட்சி மாறிதான்! இதற்கு ஆராய்ச்சி தேவைப்படவில்லை. இந்த உண்மையை உணர்த்தவே, வீடணன் தன் அண்ணனைக் கைவிட்டு இராமனிடம் அபயம் புகுவதற்கு, "அடைக்கலப் படலம்" என்று கம்பர் பெயர் தந்தார். "அடைக்கலப் படலம்" என்று பொதுப்படக் கூறாமல், "வீடணன்" என்னும் அவன் பெயரையும் சேர்த்து, "வீடணன் அடைக்கலப் படலம்" என்றார். "வீடணன் சரணாகதி" என்கின்றனர், வடமொழியாளர்.

### வீடணன் நிலை

வீடணன் தன் அண்ணனைக் கைவிட்ட நேரம் அவனை உலகோர் பாராட்ட முடியாமற் செய்து விடுகிறது. ஆம்; இராமன் தன்னுடைய வானர சேனை களுடன் இலங்கையை முற்றுகை யிட்டிருந்த நேரத்தில் வீடணன் இராவணனைக் கைவிட்டான். நல்ல வேளையாக, இராவணனை விட்டுப் பிரிவதற்கு முன் அவனுக்கு நீதி உரைத்தான். ஆம்; சீதையை விட்டு விடுமாறு வேண்டுகோள் விடுத்தான். அதை வீடணன் காலத்தோடு செய்யத் தவறிவிட்டான்.

### அனுமனைக் கொல்வதா?

சீதையைத் தேடுவதற்கென்று அனுமன் இலங்கை சென்றிருந்தபோது அங்கு அவன் அசோகவனத்தை அழிக்கிறான். தன்னை எதிர்த்த அட்சயகுமாரனையும், பஞ்ச சேனாதிபதிகளையும் கொல்கிறான். அதனால், அனுமனைக் கைது செய்து, இராவணன் முன் கொண்டு போய் நிறுத்துகிறான், இந்திரஜித்தன். அப்போது, அனுமனைக் கொல்லுமாறு இராவணன் ஆணையிடு கிறான். 'அந்நிலையில் தூது வந்தவனைக் கொல்லுதல் நீதியன்று' என்று கூறுகிறான் வீடணன்.

'மாதரைக் கொலை செய்தார்கள்
உளர் எனவரினும், வந்த
தூதரைக் கொன்றுள்ளார்கள்
யாவரே, தொல்லை நல்லோர்?'

என்றும் அண்ணன் இராவணனைக் கேட்கின்றான். இங்கு இராவணனுக்கு வீடணன் சொல்லும் அறிவுரையை ஏழு செய்யுட்களால் கம்பர் கூறுகின்றார்.

### சொன்னது சரியில்லை

அனுமனைத் "தூதன்" என்று வீடணன்கூறுவது பொருந்தா வாதம். இராமன் அனுமனை இராவணனிடம் தூது அனுப்பவில்லையல்லவா!

### சொல்லாதது சரியல்ல

வீடணன் நிலை அதுவல்ல. இராமன் இலங்கையை முற்றுகையிடுவதற்கு முன்பே, சீதையைக் கவர்ந்து வந்தது தவறு என்று இராவணனுக்கு அறிவுரை சொல்ல வீடணனுக்கு வாய்ப்புக் கிடைத்தும், அதை அவன் சொல்லவில்லை. அதைத் தான் உணராதவன் போல அதற்கு எதிராக வேறு எதையோ சொல்கிருன்.

இராமன் இலங்கையை முற்றுகையிட்ட பின்னர்தான் சீதையை விட்டு விடுமாறு முதன்முதலாக அண்ணனுக்கு அறிவுரை கூறுகின்ருன். இந்தக் காலங்கடந்த முயற்சி அந்தப் பாத்திரத்திற்குக் களங்கத்தை ஏற்படுத்தி விடுகின்றது.

இராவணன் சீதையைக் கவர்ந்து வந்தது பற்றித் தன் கருத்தைச் சொல்ல வீடணன் இங்குதான் முதன் முதலாக வாய்ப்பு பெறுகிருன். அவன் கட்சி மாறுவதை நியாயப்படுத்த வேண்டுமானுல், இங்கு அவன், "சீதையைக் கவர்ந்து வந்தது தவறு" என்று அண்ணனிடம் சொல்லியிருக்க வேண்டும். அப்படிச் சொல்லவில்லை. மாருக, .

'அந்த இராம லட்சுமணர் நம் தங்கையான சூர்ப்பகையைக் கொல்லாமல், காதுகளையும், மூக்கையும் அறுத்து, போய்ச் சொல் உன் அண்ணனிடம்' என்று

விரட்டினார்களல்லவா' அது போல, நாமும் இவனைச் செய்து அவர்களிடம் அனுப்ப வேண்டும்.'

'இவனைக் கொன்றால், அரக்கரின் ஆற்றலையும், பாது காப்பான மலையரண்களையும் பெற்றுள்ள இலங்கையையும் பற்றி இவன் கண்ணால் கண்டவற்றை இராமனுக்குச் சொல்வதற்குள்ள வாய்ப்பைக் கெடுத்தவர்களா வோம்' என்கின்றான் வீடணன். இதனைக், கம்பர் வாக்காலேயே பார்ப்போம்.

இளையவள் தன்னைக் கொல்லாது
இருசெவி மூக்கோடு ஈர்த்து
விளைவுஉரை என்று விட்டார், வீரராய்
மெய்ம்மை ஓர்வார்
களைதியேல் ஆவி, நம்பால்
இவன் வந்து கண்ணில் கண்ட
அளவு உரையாமல் செய்தி ஆதி
என்று அமையச் சொன்னான்.

வீடணன் சொல்லும் இந்தக் கருத்து அவன் கட்சி மாறியதிலுள்ள நியாயத்தைக் களங்கப்படுத்தி விடுகிறது.

இராவணனைக் கை விடுவதற்கு முன்பு வீடணன் அந்தரங்கத்தில் இராமனோடு தொடர்பு கொண்டிருக்க வில்லை. இராவணனைவிட்டுப் பிரிந்த பிறகே இராம னிடம் அடைக்கலம் புக வீடணன் நினைக்கிறான்.

இராவணனைப் பிரிந்தபோது, சில அமைச்சர்கள் அவனுடன் செல்கின்றனர். அவர்களது ஆலோசனைப் படித்தான் அவன் இராமனிடம் அடைக்கலம் புக முடிவெடுக்கிறான்.

### செய்ததும் சரியல்ல

இராவணனை விட்டுப் பிரிந்த பின் அவன், இராம — இராவணர் போரிலிருந்து விலகி நின்றிருந்திருக்கலாம். பாரதத்தில் விதுரனும் பலராமனும் அப்படித்தான் செய்தார்கள். பாரதக் கதையில் வரும் கர்ணனைப் போன்றவனாகவும் வீடணன் இல்லை.

கர்ணன் கௌரவர் கட்சியில் சேர்ந்தது அவனது குழவிப் பருவத்தில் நிகழ்ந்ததாகும். பாண்டவர் தன் உடன் பிறந்தார் என்பதை அறிந்த பிறகும், துரியோதனாதியர் கட்சியிலிருந்து விலகி வருமாறு தன் அன்னையே ஆணையிட்ட பிறகும், அதைச் செய்ய கர்ணன் மறுக்கிறானே, அதனால் அந்தப் பாத்திரத்தின் பெருமை உயர்ந்துவிடுகிறது. அவன் துரியோதனாதியரிடமிருந்து விலகிப் பாண்டவருடன் சேர்ந்திருந்தால், அவனும் கட்சி மாறிதான்!

### இராமனது பக்குவம்

இராமனிடம் வீடணன் அடைக்கலம் புகுந்தபோது, அவன் உடனே அடைக்கலம் தந்துவிடவில்லை. சுக்ரீவனின் தோழமையை ஆராய்ச்சியின்றி இராமன் ஏற்றுக் கொண்டான். வீடணன் விஷயத்தில் ஆராய்ச்சி நடத்துகின்றான். இராவணன் கட்சியிலிருந்து விலகி வந்த வீடணனைத் தன் கட்சியில் சேர்த்துக் கொள்ளு முன் செயற்குழுவிடம் ஆலோசனை கேட்கிறான். ஆம், அவனுக்கும் ஒரு செயற்குழு இருந்தது! அதிலே சுக்ரீவன், அனுமன், சாம்பன், நீலன் மற்றும் சிலர் உறுப்பினர்களாக இருந்தனர். சுக்ரீவனின் தோழமையைப் பெற்றபோது, இராமனுக்கு இலக்குவனைத்

தவிர வேறு துணை இல்லை. வீடணனுக்கு அடைக்கலந் தர நேர்ந்தபோது இராமனுக்கிருந்த சூழ்நிலை வேறு. அவன் கட்சி வளர்ந்து விட்டது.

**செயற்குழு**

வியப்பென்ன வென்றால், செயற்குழுவிலே, அனுமனைத் தவிர, மற்றுள்ள சுக்ரீவன், சாம்பன், நீலன், வேறுள்ளோர் ஆகிய எல்லோரும் வீடணனுக்கு அடைக்கலந் தருவதை ஒருமனப்பட்டு எதிர்க்கின்றனர்.

சுக்ரீவன் மிகக் கடுமையாக எதிர்க்கிறான். முதன் முதலில் எதிர்ப்புக் குரல் கொடுத்தவனே அவன்தான்! நீண்ட சொற்பொழிவு நிகழ்த்துகிறான், வீடணனுக்கு எதிராக! அவனைப் பின்பற்றித்தான் சாம்பன், நீலன் ஆகியோர் எதிர்ப்புக் காட்டுகின்றனர். இவர்கள் அவ்வளவு பேரும் சுக்ரீவனின் அமைச்சர்கள்தானே! எப்படியோ, எதிர்ப்பு தோன்றிவிட்டது, வீடணனுக்கு!

**சுக்ரீவன் பேச்சு**

சுக்ரீவன் மிகுந்த அடக்கத்தோடு இராமனை நோக்கி, "எனது அபிப்பிராயத்தைக் கேட்டிருக்க வேண்டுமா? நான்கு வேதங்களின் வரம்பினைக் கண்டவரே! தாங்கள் என்னைக் கேட்டு விட்டதால் சொல்லுகிறேன்; என் கருத்து சிறந்ததாக இல்லாம லிருக்கலாம். அசட்டுத்தனமான துணிவாகவும் இருக்க லாம். அதையும் கேளுங்கள்; பின், தங்கள் முடி வெதுவோ, அதை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்கிறான் சுக்ரீவன்.

ஆம்! சுக்ரீவனுக்கு மேலிடம் இராமன்தானே! அதனுல் மறுப்புரைக்கத் துணிந்த நிலையிலும், "கடைசியில் மேலிடத்தின் கட்டளைப்படி நடப்பேன்" என்று உறுதி கூறுகின்ருன்.

வீடணனை ஏற்கக் கூடாதென்பதற்குச் சுக்ரீவன் சொல்லும் முதற்காரணம், அவன் தன் அண்ணனைக் கைவிட்டு வந்தவன் என்பதே! "தன் அண்ணனைத் துறந்தது தரும நீதியோ?" என்று கேட்கிருன். அடைக்கலம் புக வந்த வீடணனையல்ல; அடைக்கலம் தர விருக்கின்ற இராமனைத்தான்! இதற்குமேல் சுக்ரீவன் எழுப்பும் தடை, வீடணன் அரக்கர் குலத்தவன் என்பதாகும்.

"செம்மைஇல் அரக்கரில் யாவர் சீரியோர்?'

என்பது சுக்ரீவனின் கேள்வி.

ஒருவன் யார் யாரைக் கைவிடக் கூடாதென்பதைச் சுக்ரீவன் விளக்குகிருன்.

"தகை உறு தம்முனை,
தாயை, தந்தையை

மிகை உறு குரவரை,
உலகின் வேந்தனை,

பகைவுற வருதலும்,
துறந்த பண்பு இது

நகையுறல் அன்றியும்
நயக்கற் பாலதோ?"

இது, இராமனைப் பார்த்து சுக்ரீவன் கேட்ட கேள்வி.

ஆம்; தமையன், தாய், தந்தை, குரு, நாடாளும் வேந்தன் ஆகியோரைத் துறப்பது துரோகம் என்கிருன். அதுவும் பகையால் சூழப்பட்ட நேரத்தில் துறப்பது பெரும் துரோகம் என்கிருன்; அவர்களை வரவேற்கக் கூடாதென்றும் கூறுகிருன்.

### அனுமன் உரை

வீடணனைப் பற்றித் தன் கருத்தைச் சொல்லப் புகுந்த அனுமன் தொடக்கத்திலேயே, "இவனைக் கொடியன் என்று யான் கருதவில்லை என்று கூறிவிடு கிருன். இதனுல், பகைவர்களின் உடன் பிறந்தாரிலும் நல்லவர் இருக்கமுடியும் என்று சொல்லாமல் சொல்லி விடுகிருன்.

"வாலியைக் கொன்று கிட்கிந்தை அரசை இளையவனுன சுக்ரீவனுக்குத் தானம் தந்ததை அறிந்து, தானும் அண்ணன் இராவணனுக்குப் பிறகு இலங்கை அரசைப் பெறலாம் என்ற ஆசையுடன் வீடணன் அடைக்கலம் புகுந்திருக்கிருன். பதவி ஆசை இவனுக்கு இருப்பதால் இவனை நம்பலாம்" என்கிருன் அனுமன்.

"வாலி விண்பெற, அரசு இளையவன் பெற
கோலி வரிசிலை வலியும் கொற்றமும்,
சீலமும் உணர்ந்து, நிற்சேர்ந்து தெள்ளிதின்
மேல் அரசு எய்துவான் விரும்பி மேயினுன்"

"காலங்கடந்து இவன் அடைக்கலம் புக வந்தான்" என்ற சுக்ரீவன் வாதத்திற்கும் அனுமனே பதில் சொல்கிருன் :

"காலம் அன்று, இவன் வருகாலம் என்பரேல்,
வாலிதன் கூறுபகை வலியது ஏறிய
தால், இனி அங்கு இவற்கு இறுதி ஆவதால்
மூலம் என் துணைவரைப் பிரிவு முற்றினுன்

ஆதலால், 'இவன் வரவு நல் வரவே
என உணர்ந்தேன்"

"அடியேன்; உன் தன்
வேதநூல் எனைத் தகைய திருவுளத்தின்
குறிப்பு அறியேன்"

### முற்றிய கருத்து

அனுமன் வெளியிட்ட இந்தக் கருத்து, வீடணனைப் பெருமைப் படுத்துகிறதோ இல்லையோ, கட்சி தாவுவோரின் இலக்கணத்தை வெளிப்படுத்துகிறது.

"பதவி ஆசையால்தான் ஒருவன் கட்சி மாறுவான். அதனுலேயே அவனை நாம் நம்பலாம்; தான் இருந்த கட்சி தோல்வியுற்ற பிறகோ, தோற்பது உறுதி என்பது தெரிந்த பிறகோதான் ஒருவன் கட்சி விட்டுக் கட்சி தாவுவான். இந்தக் குணங்களாலேயே அவனை நம்பி ஏற்கலாம்" என்பது, கட்சி மாறிகளுக்கு அனுமன் சொன்ன இலக்கணம். இதனுலும், வீடணன் கட்சி மாறிகளுக்கு முன்னேடியாகிருன்.

### இராமன் முடிவுரை

இதற்குமேல் இராமன் பேசுகின்ருன். அவன் தன் செயற் குழுவினரைப் பார்த்து, "கேட்டீர்களா, அனுமன்

சொன்னதை?'' என்று கூறி, ''அவன் சொன்னதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்கிறான்.

பின், அனுமனைப் பார்த்து, ''பேரறிவாள! நீ சொன்னது நன்று நன்று'' என்று கூறி, அவனைப் பாராட்டுகிறான். பின்னர், வீடணனுக்கு அபயம் தருகின்றான். அது வருமாறு :

''மற்று இனி உரைப்பது என்னோ?
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி; அன்னது
அன்று எனின், பிறிது ஒன்றானும்
வெற்றியே பெறுக, தோற்க,
வீக, வீயாது வாழ்க,
பற்றுதல் அன்றி உண்டோ,
அடைக்கலம் பகர்கின்றானை?''

வீடணனை இனந்தெரிந்து ஏற்றுக் கொள்கிறான் இராமன். இலங்கையின் பாதுகாப்பு சக்தி பற்றியும், இராவணனுக்குள்ள தனி ஆற்றல்பற்றியும் அரக்கர் குலத்தின் போர்த் திறன் பற்றியும் நீ தகவல்கள் தந்தால் போதும் என்று வீடணனிடம் இராமன் கூறுகின்றான். இதன் மூலமும் வீடணன் கட்சி மாறிதான் என்பது உறுதிப்படுகின்றது.

## காப்பிய ஒப்பீட்டில்

பாரதத்தின் பெருமைக்கு உரிய பெருங் காப்பியங்கள் இராமாயணமும் மகாபாரதமுமாகும்.

பாரதத்திலே தாம் சார்ந்திருந்த துரியோதனாதியர் அணியிலிருந்து விதுரன் வெளியேறுகிறான். ஆனால், எதிரணியில் சேர்ந்து விடவில்லை.

கண்ணனின் தமையனுன பலராமன் பாண்டவர் தரப்பைச் சேர்ந்தவனுயினும், அவர்களுடைய போர்த் தந்திரங்கள் பிடிக்காமையால் பாண்டவர் சார்பில் போரில் ஈடுபடுவதில்லை யென்று கூளுரைக்கிருன். தாங்கள் சார்ந்திருந்த கட்சிகளிலிருந்து வெளியேறிய விதுரனும் பலராமனும் போர் முடியும் வரை நாட்டில் இருப்பதில்லையென்று அறிவித்துவிட்டுத் தீர்த்த யாத்திரை போகின்றனர்.

இராமாயணத்திலே உடன் பிறந்தானை ஒழித்துக் கட்ட அன்னியனுன இராமனுடன் கூட்டுச் சேருகிருன், சுக்ரீவன். ஆனுல் அவன் கூட்டு சேர்ந்ததற்கான காரணமும், சேர்ந்த சந்தர்ப்பமும் அவனைக் கட்சி மாறியாகக் காட்டவில்லை.

கும்பகர்ணன், அண்ணன் இராவணன் பிறன் மனைவியைக் களவாடியது ''அரக்கர் குலத்திற்கே அவமானம்'' என்று சொல்லுகிருன்; ஆனுல், இறுதியில் அண்ணன் சார்பிலேயே நின்று போரிட்டு மாள்கிருன். ஆம்; கட்சி தாவவில்லை.

வீடணனின் நிலை இவர்களிலிருந்து முற்றிலும் வேறு படுகின்றது. காப்பிய உலகிலேயே வீடணன் தனி யிடத்தைப் பெறுகிருன்.

**சுக்ரீவன் வாதம்**

பகைவர்களால் தன் உடன் பிறப்பு சூழப்பட்டுள்ள நிலையிலே, அந்த உடன்பிறப்புக்காக உயிர் கொடுக் காமல், பகைவர்களுக்கு அஞ்சி, அவர்களிடம் அடைக்கலம் புகுபவன் ஆண்மையின் ஆணிவேரையே

அழிப்பவனுவான் என்றும் சுக்ரீவன் உணர்ச்சியோடு உரைக்கிருன்.

“அரக்கர் குலத்தையே அழிக்க வந்த நாம், அவர்களில் ஒருவனுக்கு அடைக்கலம் தருவது நீதி யாகுமோ?'' என்றும் கேட்டான் சுக்ரீவன்.

“இவன் வஞ்சகன். நம்முடன் இருந்தே நம்மை அழிக்கும் உள்நோக்குடன் வந்திருக்கிருன். இவன் விஷயத்தில் பெரியவர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்'' என்று கூறித் தனது வாதத்தை முடிக்கிருன்.

சுக்ரீவனின் வாதம் சரியா? தவரு? என்பது, ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட விஷயத்திற்குத் தேவையற்றதாகும். அதிலே நாம் புகத் தேவையில்லை. சுக்ரீவனின் வாதத்தைக் கொண்டும் வீடணன் கட்சி மாறியவனே என்பது உறுதிப்படுகிறது.

# 5

# சீதையின் விடுதலை

### மூவர் உதவினர்

சீதையின் விடுதலைக்கு உதவிய பெருமை அனுமனைப் போலவே, இலக்குவனுக்கும் வீடணனுக்கும் உண்டு.

ஆனால், இம் மூவரில் பெரிதும் உதவியவர் யார் என்பதுதான் ஆய்வுக்குரிய பிரச்னையாக இருக்கிறது.

### காந்தியடிகள் கருத்து

''சீதையின் விடுதலைக்குச் சீதைதான் காரணம்'' என்கிறார் காந்தியடிகள். அசுரபலம் படைத்த இராவணனுடைய ஆட்சியிலே, சிறைப்பட்டிருந்த சீதையானவள் தன் கற்பைக் காத்துக் கொண்டில்லையானால் இராமன்

யாரை மீட்டிருப்பான்? என்று கேட்கிருர் காந்தியடிகள். இது உண்மைதான்.

**பெரிதும் உதவியவர்**

"பெரிதும் உதவியவர் யார்?" என்று கேட்பதிலுள்ள "பெரிது" என்னும் சொல்லுக்குப் பொருள் காண்பதெப்படி? இலக்குவன் இந்திரஜித்தனை வென்றில்லையானுல், சீதைக்கு விடுதலை கிடைத்திருக்குமா? வீடணன் நிகும்பலை யாகத்தின் ரகசியத்தை இராமனுக்குச் சொல்லியிராவிடில், இலக்குவன் இந்திரஜித்தனை வென்றிருக்க முடியுமா? என்றெல்லாம் வாதிடுவதில் தவறில்லை.

**வீடணனு?**

வீடணன், இராமனிடம் அடைக்கலம் புகுந்தது தற்செயலாக நடந்ததுதான். வீடணன் துணை கிடைக்குமென்று நம்பி இராமன் இலங்கை மீது படை எடுக்கவில்லை. அரக்கர்களின் மாய்மாலங்களையும், இலங்கையைப் பற்றிய இரகசியங்களையும் வீடணன் இராமனுக்குச் சொன்னுன். அது சீதையின் விடுதலைக்குத் துணை புரிந்திருக்கிறது.

ஆனுல், வீடணன் தந்த இந்தத் தகவல்களை அவன் அடைக்கலம் புகுவதற்கு முன்பே, இலங்கை சென்ற அனுமன் அறிந்து வந்துவிட்டான். வந்ததுமே தான் கண்ட அவற்றை அனுமன் சொல்லாததால், வீடணன் மூலம்தான் முதன் முதலாக நாம் அறிந்து கொள்ள முடிகிறது. அனுமன் அதனைச் சொல்லாததற்குக் காரணம் உரிய காலத்தில் சொல்லலாம் என்று எண்ணியதுதான். ஒருகால், வீடணன் அடைக்கலம் புகுந்தில்லையானுல்,

போர் தொடங்கிய பின்னர் தேவையான நேரத்திலே அனுமன் இலங்கையில் தான் கண்டவற்றை எல்லாம் இராமனிடம் சொல்லியிருப்பான்.

வீடணன், ஆயுதமேந்திப் போர் செய்யவில்லை என்பது இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாகும். வீடணன் சொன்ன ரகசியங்களை அவன் அடைக்கலம் புகுந்தில்லையானால், வேறு வகையிலும் இராமன் தெரிந்து கொண்டிருக்க முடியும். ஆகவே மிகுதியும் உதவி புரிந்தவன் வீடணன்தான் என்ற முடிவுக்கு வருவதற் கில்லை.

## இலக்குவனா?

இலக்குவன், இந்திரஜித்தை வென்றது சீதையின் விடுதலைக்கு உதவியாக இருந்திருக்கிறது. இந்திரஜித்தன் வீழ்ச்சியோடு இராம - இராவணன் போரின் முடிவு தெரிந்து விடுகிறது. இந்த வகையிலே, சீதையின் விடு தலைக்கு உதவி புரிந்ததிலே, வீடணனை விஞ்சி நிற்கிறான் இலக்குவன்.

இலக்குவன் இல்லையானாலும், இந்திரஜித்து வெல்லப்பட்டிருப்பான். உண்மையில் இந்திரஜித்தை இலக்குவன் வென்றது இராமனுடைய தெய்வீகத்தின் துணை கொண்டுதான். தன்பலம் கொண்டு மட்டுமே அவன் வெல்லவில்லை.

"மறைகளே தேறத்தக்க,
வேதியர் வணங்கற்பால,
இறைவன் இராமன் என்னும்
நல்லற மூர்த்தி என்னின்

பிறை எயிற்று இவனைக்கோறி
என்று, ஒரு பிறைவாய்வாளி
நிறைவுறவாங்கி விட்டான்
உலகெலாம் நிறுத்தி நின்றான்.''

என்று கம்பர் கூறுகின்றார்.

## இராமன் துணை

இந்திரஜித்தனுடன் பல நாட்கள் போர் செய்த பின்னும் அவனுடைய கையை வெட்டி வீழ்த்திய பின்னும் அவனை வெல்ல இலக்குவனால் முடியவில்லை. தன் பலங்கொண்டு மட்டும் அவனை வெல்ல முடியாது என்ற முடிவுக்கும் இலக்குவன் வந்து விடுகிறான்; அந்தத் தோல்வி மனப்பான்மையில் தன் அண்ணன் இராமனுடைய தெய்வீகத்தைத் துணைக்கு அழைக்கிறான்.

பிறைச் சந்திரன் வடிவத்திலுள்ள ஒரு அம்பைக் கையிலெடுத்துக் கொண்டு ''என் அண்ணன் இராமன் தான் இறைவன் என்பது உண்மையானால், இறைவனே என் அண்ணனாக அவதரித்திருக்கிறான் என்பது உண்மையானால், யான் ஏவும் பிறைவாளி இந்திர ஜித்தைக் கொல்லட்டும்'' என்று சொல்லி, தன் கையிலுள்ள அம்பை இந்திரஜித்தன் மீது விடுகிறான். அவனும் செத்து வீழ்கிறான்.

ஆகவே, இந்திரஜித்தை இலக்குவன் வென்றதிலே இராமனுக்குப் பெரும்பங்கு உண்டு.

நிகும்பலை யாகத்தின் ரகசியத்தைச் சொன்னதனால், இலக்குவன் வெற்றியிலே வீடணனுக்கும் பங்கு

உண்டு. ஆகவே பெரிதும் உதவி புரிந்தவன் அனுமனை விடவும் இலக்குவன்தான் என்னும் சொல்ல முடியாது.

### அனுமன்

இனி, அனுமன் செயலை எடுத்துக் கொள்வோம்.

இலக்குவன் இந்திரஜித்தனை வென்றதிலே, வீடண னுக்கும் இராமனுக்கும் பங்கு உண்டு என்பதற்காக மட்டுமே பெரிதும் உதவியது அனுமன்தான் என்பர். சீதை மீட்சிக்குப் பெரிதும் உதவியவன் அனுமன்தான் என்பதற்கு அவனுடைய செயல்களிலிருந்தும் சான்று களைத் தேடவேண்டும்.

### பிரிவுத் துயர்

சீதையை இராவணன் சிறை வைத்த பின்னர் இராமனும் இலக்குவனும் செய்வதறியாது திகைக் கின்றனர். இராமனோ, தேம்பித் தேம்பி அழுகிறான். எதிர்காலமே அவனுக்கு இருண்டு விடுகிறது. சிவ பூஜையையே அவன் மறந்து விடுகிறான். உடன் இருக்கும் இலக்குவன் ஒரு பேச்சுக்குக்கூட சீதையை நான் மீட்டு வருகிறேன் என்று கூறவில்லை. அந்த அளவில் அவனுக்கும் எதிர்காலம் இருண்டு விடுகிறது.

இந்த நிலையில் சபரிதான் சீதையை மீட்பதற்கு ஆலோசனை சொல்கிறாள். ஆம்; சுக்ரீவன் துணையைத் தேடுமாறு அவள் சொல்கிறாள். இதை நினைவில் கொண்டால் சீதையின் விடுதலைக்குப் பெரிதும் உதவியவன் இலக்குவன்தான் என்று எப்படிச்

சொல்ல முடியும்? அவனும் சேர்ந்து போய்தானே சுக்ரீவன் துணையைப் பெறுகிறான்.

முதன் முதலில், சுக்ரீவன் துணையை இராமனுக்குத் தேடித் தருவது அனுமன்தான். சொல்லின் செல்வனான அனுமனுடைய நாவன்மையையும், இராஜ தந்திரமும் இராமனுக்கும் சுக்ரீவனுக்கும் உறவு ஏற்படக் காரணமாகின்றன. இந்தக் காரியத்தை அனுமன் செய்கிறான் என்பதன்றி, அனுமன்தான் செய்திருக்க முடியும் என்பதனையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

## அனுமனின் திறமை

இராமனைக் கண்ட பின்னும் சுக்ரீவனுக்குத் துணிவு வரவில்லை. 'இந்த இராமனாவது நமது அண்ணன் வாலியை வெல்வதாவது!' என்று சுக்ரீவன் நினைக்கிறான். அந்த நினைப்பை மாற்றி, இராமன் வாலியை வெல்ல முடியும், வெல்லவும் செய்வான் என்ற நம்பிக்கையை சுக்ரீவனுக்கு ஏற்படுத்துகிறான் அனுமன். மேலும் ஏழு மரா மரங்களைத் துளைத்துக் காட்டுமாறு இராமனுக்கு ஆலோசனை கூறி, அதை அவன் செய்து காட்டுவதன் மூலம் சுக்ரீவனுக்கு நம்பிக்கை ஏற்படுத்துவது அனுமன் தான். இதையும் அனுமன்தான் செய்திருக்க முடியும்.

சீதை இருக்குமிடத்தைக் கண்டு வந்து சொன்னவன் அனுமன்தான். இதையும் அவன் தானே செய்திருக்க முடியும்? கடலைத் தாவிச் செல்வது இலக்குவனாலும், வீடணனாலும் ஆகக் கூடியதா?

சீதையை எடுத்துச் சென்றவன் இராவணன்தான் என்று அனுமானித்துச் சொல்கிறான் இலக்குவன்.

இராவணன் தான் சீதையை எடுத்துச் சென்முன் என்று தான் கண்ணுல் கண்ட உண்மையை ஜடாயு இராமனுக்குக் கூறுகிருன்.

இவற்றை எடுத்துக் காட்டி, அனுமன் சீதையைக் கண்டு வந்து சொன்னதைக் குறைத்துக் காட்ட முயல்வாரும் உளர். சீதையைக் கொண்டு சென்றவன் இராவணன்தான் என்பதைத் தெரிந்து கொண்ட பின்னரும், சீதை இலங்கையில் எந்த இடத்தில் வைக்கப்பட்டிருக்கின்ருள் என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கின்றது. சீதை உயிரோடு இருந்தாலும், அவளுடைய மனோ நிலை எப்படி யிருக்கிறது என்பதையும் இராமன் அறிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வளவையும் அறிந்துகொண்ட பின்னர்தான் இராமன் இராவணன் மீது போர் தொடுக்க வேண்டியிருக்கிறது. இவ்வளவையும் கண்டு வந்து சொன்னவன் அனுமன் தானே! அந்தச் சாதனையை அனுமனைத் தவிர இராமாயண பாத்திரங்களிலே வேறு யாரேனும் புரிந்திருக்க முடியுமா?

### அருந்திறலோன்

சீதை இருக்குமிடத்தை அறிய வான வெளியில் பறந்து இலங்கையிலுள்ள ஒவ்வொரு மாளிகையையும் துருவித் துருவிப் பார்க்கிருனே, அது அவனைத் தவிர வேறு யார் செய்திருக்கமுடியும்?

“ஒரு மாதத்தில் உன்னை இராகவன் மீட்பான்” என்று சீதைக்கு அனுமன் உறுதி மொழி கூறுகிருனே, அதனுல், சீதைக்கு விடுதலை தேட தன்னுல் முடியும் என்பதில் அவனுக்கிருந்த தன்னம்பிக்கை புலப்படுகிறதல்லவா?

சீதை இருக்குமிடத்தைக் கண்டு வருவதற்காக இலங்கை சென்ற அனுமன் அங்கு ஒரு குட்டிப் போரே நிகழ்த்தி, இனி இராமனும் அவனுடைய குரங்குச் சேனை களும் நடத்தும் போர் எப்படியிருக்கு மென்பதனை இராவணனுக்கு உணர்த்துகிறுன் அனுமன். 'ஒரு குரங்கே இலங்கையை இந்தப் பாடு படுத்துமானல் இனி, குரங்கு சேனைகள் எல்லாம் புகுந்தால் இலங்கை என்ன ஆகுமோ?' என்று அரக்கர்கள் எல்லாம் அஞ்சும்படியாக அல்லவா, அனுமன் செய்கிறுன்? அதை யும் அவன் தானே செய்ய முடியும்?

இலக்குவனை உயிர்ப்பிக்க சஞ்சீவி பருவதத்தையே கொண்டு வருகிறுனே, அதையேனும் அவனைத் தவிர வேறு யாரேனும் சாதித்திருக்க முடியுமா?

**விடணன் நிலை**

இலங்கைப்போர் முடிந்ததும் "சீதையைத் தன்னிடம் அழைத்து வருமாறு இராமன் ஆணையிடுவது அனுமனுக் கல்ல, விடணனுக்குத்தானே"? என்றும் வாதிடலாம்.

இராவணன் கொல்லப்பட்ட கணமே, சீதை விடுதலையாகி விட்டதாகத்தான் நாம் கொள்ளவேண்டும். ஆயினும், இராவணன் மரணத்துக்குப் பின் விடணன் இலங்கையின் வேந்தனுகி விடுகிறுன். அவன் இராம னிடம் சரண் புகுந்த போதே வருங்கால இலங்கை வேந்தனுக அவனைச் செய்து விடுகிறுன் இராமன். அதனுல் அரசியல் சட்டப்படியும் சீதையின் விடுதலையை விடணன் மூலம் நிகழ்த்த வேண்டிய கடமை இராமனுக்கு ஏற்பட்டு விட்டது.

அப்போதும், "சீதையை விடுதலை செய்" என்று சொல்லாமல் அவள் ஏற்கனவே விடுதலையாகிவிட்ட

தாகவே பாவித்து, ''சீதையை என்னிடம் அழைத்து வா!'' என்றுதான் வீடணனுக்கு ஆணை இடுகிறுன் இராமன். ஆகவே, இதை வைத்துக்கொண்டு சீதையின் விடுதலைக்குப் பெரிதும் உதவி புரிந்தது வீடணன்தான் என்று வாதிடுவது பொருந்தாது. ''பெரிதும்'' என்பதற்கு இந்தக் காரணம் உறுதிப்பாடு இன்றி எளிதில் வீழ்ந்து விடுகிறது.

வீடணன் செய்த உதவியை வேறு யாரும் செய் திருக்க முடியாதா? இலக்குவன் செய்த உதவியை வேறு யாரும் செய்திருக்க முடியாதா? அனுமன் செய்த உதவியை வேறு யாரும் செய்திருக்க முடியாதா? என்று வினு எழுப்பிக் கொண்டு விடை காண முயல வேண்டும். அந்த விடைதான் ''பெரிதும்'' என்பதற்குப் பொருளாக அமைய முடியும்.

அப்படிப் பார்த்தால், வீடணன் இராமனுக்குத் தந்த தகவல்களை வேருெரு அரக்கன் மூலம் இராமன் பெற்றிருக்க முடியும். இலக்குவன் இந்திரஜித்தைக் கொன்று செய்த உதவியை இராமன் தானேயும் செய் திருக்க முடியும். இராமனுடைய தார்மிக உதவியோடும் தான் இலக்குவன் செய்தான்.

**வினை பல முடித்த வித்தகன்**

இராமனுக்கும் சுக்ரீவனுக்கும் உறவு ஏற்படுத்தி,

சீதை இருக்குமிடத்தைக் கண்டு வந்து சொல்லி,

தற்கொலை விபத்திலிருந்து சீதாதேவியைக் காத்து,

இராமன் தந்த கணையாழியைச் சீதையிடமும், சீதை தந்த சூடாமணியை இராமனிடமும் கொடுத்து,

இலங்கையில் ஒரு குட்டிப் போரை நிகழ்த்தி, இராமனுடைய குரங்குப் பட்டாளத்தின் பேராற்றலை இலங்கை வாழ் அரக்கருக்கு உணர்த்தி,

நாக பாசத்தால் மூர்ச்சித்துக் கிடந்த இலக்குவன் உயிரை சஞ்சீவி பருவதத்தின் மூலம் காத்து, சீதையை விடுவிப்பதற்கு உதவிகள் புரிந்தான் அனுமன்.

இத்தனை உதவிகளை அனுமன்தான் புரிந்திருக்க முடியும். இவற்றை எல்லாம் அனுமன் புரிந்தில்லையானால், சீதையை மீட்க இராமனால் முடிந்திருக்காது.

ஆகவே, சீதையின் விடுதலைக்குப் பெரிதும் உதவி புரிந்தவன் அனுமன்தான் என்று கூறுவதே பொருத்தமாகும்.

# 6

# கம்பர் காட்டும் அரசு

## வழிபாட்டு முறை

கவியரசர் கம்பர், தமது காப்பியத் தலைவனாகிய இராமனை வழிபடு தெய்வமாகக் கொண்டவர். இது, வழிவழி வந்த மகாகவிகளின் மரபாக இருந்திருக்கிறது.

கம்பருக்கு ஓராயிரமாண்டுகள் முற்பட்டவரான இளங்கோவடிகள், தாம் படைத்த சிலப்பதிகாரக் காப்பியத்தின் தலைவியாகிய கண்ணகியை வழிபடு தெய்வமாகக் கொண்டார். இதனை, காப்பியத்தின் இறுதியிலுள்ள ''வரந்தரு காதை''யிலே அடிகள் கூறியுள்ளார். அடிகளைப் போன்று கம்பர் இராமனைத் தெய்வ வடிவில் கண்டு வழிபடவில்லை யென்றாலும், மானசீகமாக காண்டந்தோறும் படைத்துள்ள காப்புச் செய்யுட்களில் வழிபடுகின்றார்.

"வானின் றிழிந்த வரம் பிகந்த
மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறத்தும் உளன் என்ப
கூனும் சிறிய கோத் தாயும்
கொடுமை இழப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கடந்து, இமையோர்,
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தன்."

### காந்தியடிகளின் பக்தி

கம்பரைப் போன்றே காந்தியடிகளும் இராமனை வழிபடு தெய்வமாகக் கொண்டிருந்தார். நாள்தோறும் மாலை நேரத்திலே பிரார்த்தனைக் கூட்டத்தில் 'ராம்தூன் பஜனை' செய்து வந்ததோடு, உயிர்விடுங் காலத்திலும், "ஹே ராம்!" என்று கூறி, இராம நாமத்தை ஜெபித்த வண்ணம் அமரரானார்!

இந்தியப் பெருநாடு இந்த இருபதாம் நூற்றாண்டில் கண்ட தேசியப் பெருந் தலைவர்களிலே வேறெவரிடமும் நாம் இதனைக் காண முடியவில்லை. "ராம்" என்ற சொல்லே அடிகளுக்குத் தாரக மந்திரமாக இருந்தது. அதிலே, இராமாயண காப்பியத்தில் வரும் அனுமனைத் தான் அவருக்கு உவமை சொல்ல முடியும்.

பல கோடிக்கணக்கான பாரத மக்கள் காந்தியடிகளைத் தங்கள் தலைவராகக் கொண்டிருந்தார்கள். அவரோ, இராம பிரானைத் தனது தலைவனாகக் கொண்டார். கம்ப ராமாயணத்தின் தொடக்கத்திலுள்ள காப்புச் செய்யுளிலே,

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளையாட் டுடையா ரவர்
தலைவ ரன்னவர்க் கேசரண் யாங்களே"

என்கின்றார் கம்பர்.

## இராம நாமமே மருந்து

தாம் உண்ணா நோன்பிருந்த நாட்களிலே தம் உயிரைக் காத்தது இராம நாமமே என்று காந்தியடிகள் கூறுகின்றார். அது வருமாறு:

"இருபத்தொரு நாட்கள் உண்ணா நோன்பிருந்த போது, என்னை உயிரோடு வைத்து. உற்சாகமளித்தது நான் ஏராளமாகக் குடித்த தண்ணீரன்று; சில நாட்கள் குடித்த ஆரஞ்சுப் பழச்சாறுமன்று; பெரிய டாக்டர்கள் பக்கத்திலிருந்து பணிவிடை புரிந்ததுமன்று; என்னுடைய ராமன் என்னும் கடவுளை அரியாசனத்தில் ஏற்றி வைத்திருந்ததுதான்..."

கோசல நாட்டு மக்கள் தாங்கள் உண்ணும் நீரினும் சிறந்ததாக இராம நாமத்தைக் கருதினர் என்கிறார் கம்பர்.

"உண்ணும் நீரினும் உயிரினும்
அவனையே உவப்பர்"

என்பது கம்பர் வாக்கு.

இராம நாமத்தின் மகிமை பற்றி 'வாலி வதைப்' படலத்திலே கம்பர் கூறுகின்றார். ஆம்; "நோய்க்கு மருந்து இராம நாமமே" என்கிறார். உடல் நோய்க்கு மட்டுமல்ல; "பிறவி" என்னும் பெருநோய்க்கும் அதுவே மருந்து என்றும் கம்பர் சொல்கிறார். "இம்மையே

எழுமை நோய்க்கும் மருந்து'' என்பது கம்பர் வாக்கு. இதையேதான் காந்திஜியும் கூறுகின்ருர்.

"இதயபூர்வமாக இராம நாமத்தைச் சொல்லு பவர்கள் இணையற்ற சக்தி யிடமிருந்து உதவி பெறு கிருர்கள். பிறவிப் பிணி தீர்க்கவும் அதுவே மருந்து. அணுகுண்டைக்கூட, அதற்கு இணையாகச் சொல்ல முடியாது. அது சகல துன்பங்களையும் நீக்கக்கூடிய சக்தி பொருந்தியதாகும்.''

இராம நாமத்தின் பலத்தை பாத்திரங்களின் வாயி லாகக் கம்பர் வெளிப்படுத்தினுலும், அதனை அவருடைய சொந்தக் கருத்தாகக் கொள்வதிலும் தவறு இருக்க முடியாது.

## தமிழ்ப் பண்பாடு

காந்தியடிகள் வாழ்விலே அவருக்குப் பெருந் துணை யாக நின்றவர்களை மொழிவாரியாகப் பார்க்குமிடத்து, தமிழ் பேசும் இனத்தவரே முக்கியமானவர்களாவார்கள். இதனை, அடிகள் எத்தனையோ முறை கூறியிருக்கிருர்.

''வாழ்க்கை முறையில் நான் தமிழ்ப் பண்பாட்டைச் சார்ந்தவனே''

என்றும் அடிகள் கூறியிருக்கிருர்.

''தமிழ் நாடு அமைதி தவழும் நிலம். இங்கு வரும் ஒவ்வொரு சமயத்திலும் என் மனத்திலே அமைதி குடி கொண்டு விடுகின்றது''

என்றும் அடிகள் கூறியுள்ளார். இதற்கு, கம்பருக்கும் காந்தியடிகளுக்கும் உள்ள பண்பாட்டு ஒற்றுமையே காரணமாகும்.

கம்பர் கண்ட இராமன், வேடர் குலத்துக் குகனையும், குரக்கர் குலத்துத் தலைவனான சுக்ரீவனையும், அரக்கர் இனத் தலைவனான வீடணனையும் உடன்பிறந்தாராகக் கொண்டான். அதனை,

"குகனொடும் ஐவரானோம் முன்பு; பின், குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானோம்; எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனோம்;
புகலருங் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான் உந்தை"

என்ற செய்யுளிலே, இராமன் வாக்காலேயே கம்பர் அறிவிக்கின்றார்.

### இராமனே காந்தியடிகள்!

காந்தியடிகளும் ஏழை, கீழ்மகன் என்னாது மக்களில் எல்லோரையும் சமமாகப் பாவித்து நேசித்தார். கம்பருடைய காப்பியத்தில் படமாடும் இராமனே, இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த நடமாடும் காந்தியடிகளாக வாழ்ந்தார் எனலாம்.

### இராம ராஜ்யம்

கம்பர், இராமராஜ்யத்தைக் காட்டாவிட்டாலும் இராமனைப் பெற்றெடுத்த இராஜ்யம் எப்படியிருந்தது என்பதனைப் பால காண்டத்திலே கூறுகின்றார். "இல்லாருமில்லை; உடையாரும் இல்லை" என்கிறார். ஆம்; "ஏழை

யென்று எவனுமில்லை அயோத்தியிலே'' என்கிறார். ஏனெனில், ''பணக்காரர்'' என்ற சாதியே இல்லாததால், ''கற்றார் இவர்; அவர் கல்லாதவர்'' என்று சொல்லும் நிலையும் அயோத்தியில் இல்லையாம்! ஏனெனில் எல்லோரும் கல்வி கற்றிருப்பதால்!

அயோத்தியிலே கள்வரே இல்லாததால், எங்கும் எந்தப் பொருளுக்கும் காவலே இல்லையாம்!

பெண்களெல்லாம் பொருந்து கல்வியும் செல்வமும் பெற்று வருவிருந்து ஓம்பி வாழ்வாங்கு வாழ்கிறார்களாம்! இதனை, கம்பர் வாக்காலேயே அறிவோம்.

''தெள்வார் மழையும் திரை ஆழியும் உட்க, நாளும்
வள்வார் முரசம்அதிர் மாநகர் வாழும் மாக்கள்
கள்வார் இலாமைப் பொருள் காவலும் இல்லை; யாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை''

''கல்லாது நிற்பார் பிறரின்மையின், கல்விமுற்ற
வல்லாரும் இல்லை; அவைவல்லர் அல்லாருமில்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே,
இல்லாருமில்லை; உடையார்களும் இல்லை மாதோ''

பொதுவாக, இராமனைப் பயந்த இராஜ்யத்தை முழு வடிவத்தில் ஒரு செய்யுளிலே கம்பர் காட்டுகிறார், காண்போம்.

''ஏகம் முதற்கல்வி முளைத்தெழுந்து எண்ணில் கேள்வ
ஆகம் முதல் திண்பனை போக்கி, அருந்தவத்தின்
சாகம் தழைத்து, அன்பரும்பி, தருமம் மலர்ந்து,
போகங் கனிஒன்று பழுத்தது போலுமம்மா!''

கம்பர் வருணிக்கும் இந்த இராஜ்யத்தையே ‘‘இராம ராஜ்யம்’’ என்றும், ‘‘சர்வோதய சமுதாயம்!’ என்றும் காந்தியடிகள் வருணித்தார். கடையனுக்கும் கடைத் தேற்றம் தரும் புதிய பாரதத்தையே காந்தியடிகள் விரும்பினர்.

கம்பர் புகழ் பரப்பப் பாடுபடுவோர் ஒவ்வொருவரும் அந்த மகாகவி தமது இராமாயணத்தில் காட்டும் இராம ராஜ்யத்தைப் படைக்கப் பாடுபட்ட காந்தியடிகளையும் நினைவில் கொள்வாராக! இராமாயணப் பாத்திரங்கள் வாயிலாகக் கம்பர் போதித்ததையே, காந்தியடிகள் சாதிக்க முயன்ருர்! ஓரளவு சாதித்தும் காட்டினர்.

வாழ்க, கம்பர் புகழ்! மலர்க, காந்திஜி விரும்பிய இராம ராஜ்யம்!

# 7

# உலக மகா கவியும் 'பால பாரதி'யும்

## உலக மகாகவி

உலக மகா கவிகளின் அவையொன்று கூடுகின்றது. அவைக்குத் தலைமை தாங்கும் பொறுப்பும் ஒரு மகா கவிக்குத்தான் உரியது. யாருக்கு வாய்க்கும் அந்த வாய்ப்பு?

விடுதலைப் போராட்டக் காலத்தில் ஒரு கட்டம் வரை ஆயுதப் புரட்சியிலே அளவற்ற நம்பிக்கை வைத்திருந்தவரும், காந்தி சகாப்தத்தின் போது அகிம்சைப் புரட்சியிலே பற்றுக் கொள்ளும் அளவுக்கு மனமாற்றம் அடைந்தவருமாவார் வரகனேரி வெங்கட சுப்பிரமணிய ஐயர்.

அவர் அந்த உலக மகாகவியின் அவைக்குக் கம்பரைத் தலைவராக்குகின்றார். அதற்கு அவர் கூறும்

காரணம் என்ன? ஐயர் அவர்கள் வான்மீகி ராமாயணத்தை நன்கு கற்றவர். அதுமட்டுமா? உலக மொழிகள் பல கற்றவர். எனவே கம்பரை அந்த அவைக்குத் தலைவராக்குவதில் அவருக்குத் தயக்கம் தோன்றவில்லை. அவர் கூறும் காரணம் கேட்போம்.

"ரஸவாதிகளுக்கும் அகப்படாத ஆயிரத்தெட்டு மாற்றுத் தங்கத்துக்கிணையான, கம்பீரமான செய்யுள் களும், அவற்றைப் பொருந்த அமைத்து வைக்கும் ரசனைத் திறனுமே கம்பனைப் பிராகிருதமான கவிகளினின்றும், அவன் சாதியைச் சேர்ந்த கலைவலாளரான வான்மீகி, வியாசன், ஹோமர், மில்தன் முதலியோரினின்றும் வேறு படுத்தித் தனிச் சிறப்புத் தருகின்றன."

**'பால பாரதி'**

அந்தப் பெரியார், தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம், பிரெஞ்சு, கிரேக்கம், ஜெர்மன், இன்னும் பல மொழி களிலே பெற்றிருந்த புலமைத் திறனைக் கொண்டு, கம்ப ருடைய புலமையைத் திறனாய்வு செய்தார். அவர், "பால பாரதி" என்ற மாத இதழினை நடத்தினர். அதில் 'கம்ப ராமாயணம்' என்னும் தலைப்பில் தொடர் கட்டுரை எழுதி வந்தார். அத்தொடர் கட்டுரை முடியும் முன்னே ஐயரின் வாழ்வு முடிந்து விட்டது.

**கம்பரே சிறந்தவர்**

வ.வெ.சு. ஐயர், கம்பரிடம் கரைகாணாக் காதல் கொண்டிருந்தார். வால்மீகி ராமாயணத்தைக் கம்ப ராமா யணத்தோடு ஒப்பிட்டு ஆராய்ந்து, வால்மீகியினும்

கம்பரே திறமான புலவர் என்பதனைத் திடமாக வற்புறுத்தினர்.

ஐயரவர்கள் வால்மீகியை விடவும் கம்பரைச் சிறப்பித்துத் தமது 'பால பாரதி' இதழிலே எழுதிவந்த காலத்திலேயே பலர் அவரைக் குறை கூறினர். சிலர் கோபத்தையும் வெளிப்படுத்தினர். அதற்கெல்லாம் அவர் அஞ்சவில்லை. தமக்கு எதிராக எழுந்த கண்டனங்களுக்கு அவர் சமாதானம் கூறினர். ஆயினும் வால்மீகியினும் கம்பனே சிறந்தவன் என்னும் தமது கருத்தை உறுதிப்படுத்தினர். வே. சேஷகிரி ஐயர் என்பவருடைய கண்டனத்துக்கு அவர் பின்வருமாறு பதிலளித்துள்ளார்.

"இரசனைச் சுகம் கம்பராமாயணத்தில் அதிகம் காணப்படுகிறது என்பதே எனது கக்ஷி! வால்மீகியில் இரசனைச் சுவை இல்லவே இல்லை என்று நான் கூறுவதாக ஒரு நாளும் ஆகாது. மற்று ரசனைச் சுவையில் வால்மீகி ராமாயணம் கம்பராமாயணத்தைத் தவிர மற்றெல்லா மகா காவியங்களையும் விட உயர்ந்தது என்பதே எனது தாழ்ந்த அபிப்பிராயம்."

## கருப்பொருளும் கதையும்

இராமாயணத்தின் கருப் பொருளிலே, முதனூல் தந்த வால்மீகிக்கும், வழி நூல் வழங்கிய கம்பருக்கும் உள்ள ஒற்றுமை பற்றி ஐயர் வெளியிட்ட கருத்து வருமாறு:

"ராவண வதத்தையே ராமாயணத்தின் வஸ்துவாக வால்மீகி பகவான் அமைத்தது போலவே கம்பனும் அமைத்திருக்கிருன். இவ்வஸ்துவின் ஒருமையைக் கம்பன் மறப்பதே யில்லை. முக்கியமான

கட்டங்களில் எல்லாம் அவன் தனக்கும் படிப் போருக்கும் அதை நினைவுறுத்திக் கொண்டே செல்லுகிறான்.''

''இந்த வஸ்து, ஒருமை உணர்ச்சி அயோத்தியா காண்டத்திலிருந்துதான் உண்டாகிறது. அயோத்தியா காண்டத்தினின்று கதையானது மத்தகஜத்தின் நடையோடு, கங்காப் பிரவாகத்தின் கமனத்தோடு ராவண வதம்வரை செல்லுகிறது. உபாக்யானங் களுக்காக வேனும், மந்திராலோசனைக்காகவேனும் கதை நிற்கிறதே என்றால், அது இயற்கையை ஒட்டியே அவ்வாறு நிற்கின்றது. வனராஜனான கஜேந்திரனும் அங்கங்கே ஆகாரத்துக்காக நிற்கிறான். அங்கங்கே இளைப்பாறுகிறான். கங்கா நதியும் சமதடத்தில் வேகம் குறைகிறது. யமுனை முதலிய உப நதிகளின் நீரை ஏற்றுக் கொள்ளுகையில் வேகத்தைத் திரும்பப் பெற்று, கண்டோர் வியக்கச் செல்லுகிறது. கிளை நதிகளையும் கால்வாய்களையும் நிரப்பிக் கொண்டு சற்று ஆலசியமாக நடக்கிறது. ஆனால் ஆலசியமெல்லாம் அடுத்த கட்டத்தில் இரண்டு பங்கு வேகமாகச் செல்லுவதற் காகத்தான். கடைசியில் சமுத்திர ராஜனோடு கலப்பதற்கு முன் கங்காதேவியின் அழகையும் கம்பீர்யத்தையும் வாயால் வர்ணித்துச் சொல்ல ஒண்ணுமோ? தேவர்களும் கண்டானந்திக்கத் தகும் காட்சியன்றோ கங்கா தேவியின் சமுத்திர சங்கமம்! இத்தகைய வேகமும் ஓட்டமும் பொலிவும் இருக்கிறது கம்பராமயணத்தில்.''

### வான்மிகியினுஞ் சிறந்தவர்

இப்படி வ. வெ. சு. ஐயர், ரசனையிலே வான்மீகியின் காப்பியத்தை விடக் கம்பர் தந்த காப்பியம் சிறந்து

விளங்குகிறதென்பதற்கு எத்தனை எத்தனையோ சான்று களைத் தம் தொடர்கட்டுரையிலே எடுத்துக் காட்டி, கவிஞர் குலத்தின் சக்கரவர்த்தி என்னும் சிறப்பைக் கம்பருக்குத் தருகிறார்.

ஆரண்ய காண்டத்தை வான்மீகியினிடமிருந்து இரவல் பெற்ற கம்பர், தம்முடைய கவிதைத் திறமையால் முதனூலாசிரியர் படைத்ததைவிடச் சிறப்பாகப் படைத்துள்ளார். இது பற்றியும் வ. வெ. சு. ஐயர் விமர்சித்துள்ளார்.

ஐயர் கூறியவற்றைக் காண்போம்.

"வால்மீகியின் ரசனைக்கும் கம்பனுடைய ரசனைக்கும் பேதத்தைச் சற்று ஆழமாகக் கவனித்தல் பயனுடையதாகும். வால்மீகியில் ராமன் தசரதனுடைய சன்னிதிக்கு வந்த பிறகு பதினெட்டு சுலோகங்களால் என்ன நேர்ந்திருக்கலாம் என்று தனக்குள் தானே ஆலோசித்துக் கொண்டு கைகேயியைக் கேட்கிறான். என்ன என்று கேட்டதற்கு கைகேயி பழங்கதையெல்லாம் சொல்லிவிட்டு, எட்டு சுலோகங்களால் நீ அரசன் வார்த்தையை நிறைவேற்றுவாயா என்று கேட்கின்றாள். பிறகு, தான் வரங்களைப் பெற்ற வரலாற்றை கைகேயி சொல்லிக் காட்டுக்குப் போ என்று ஆஞ்ஞாபிக்கிறாள். ராமனுடைய பதிலும் வள வள என்றே யிருக்கிறது. இத்தகைய நிகழ்ச்சியினால் கதை தொய்ந்து போய்விடுகிறது.

"கம்பனிலோ ராமன் வருவதும், கைகேயி ஆணையிடுவதும், ராமன் ஒரு வார்த்தையில் மறுமொழி கூறிவிட்டு விடைபெற்றுக் கோசலை கோயில் போவதும் அதிவேகமாக, மிகக் கெடுபிடியாக நடப்பதால், கதை

நாணேற்றின வில்லைப் போல வன்மையுடைத்தாய் நடக்கிறது.

"ராமன் காட்டுக்குச் செல்லுகையில் யாத்திரா தானம் செய்கிறதை வால்மீகி வெகு விஸ்தாரமாக வர்ணிக்கிறான். இந்த இடத்தில் கதையின் வேகத்தைக் குறைப்பது சரியாகவில்லை. ஆதலால், கம்பர் கதையை இத்தகைய வர்ணனையினால் நிற்கச் செய்யாமல் உரிய வேகத்துடன் செல்லச் செய்கிறான். இங்கே கம்பனுடைய கதை அசுவகதியில் செல்லுகிறது. அதாவது கம்பீரமாயும், வேகமாயும் ஒரே மூச்சில் வெகு தூரம் செல்லுகிறது. பிறகு சிறிது நேரம் ஆசுவாசம் செய்து கொள்ளுகிறதற்காகக் குதிரை நிற்குமே அதுபோலச் சற்று விளம்பமான வர்ணனைகளுடன் தேங்குகிறது. ஆனால், உடனே பழைய வேகத்துடனும், உக்ரத்துடனும் கிளம்பி வெகுதூரம் கட்டுக்கு அடங்காது போலச் செல்லுகிறது."

"ஆரண்ய காண்டம்தான் ராமாயணத்தின் மத்திய பாகம். கிஷ்கிந்தா காண்டம் கேவலம் உபாக்யானமேயானதால், கதையின் காண்ட வரிசையிலும் ஆரண்ய காண்டத்தையேதான் மத்திய காண்டமாகக் கொள்ள வேண்டும். இதில்தான் ராம - ராவணரின் பகைமைக்கு நேரான காரணமான சீதாபஹரணம் நிகழ்கின்றது. ஆதலால், ராம கதையாகிற கன்னிகையின் மேகலாபரணமாக விளங்குகிற இக்காண்டத்தின் ரசனை மிக அழகாக அமைந்திருத்தல் வேண்டும்.

"இக்காண்டத்தில் முதல் 224 விருத்தங்கள் வரையில் கதை ஆலசியமாகத்தான் நடக்கிறது.

விராதன் வதைப்படலம் மாத்திரம் சிறிது வேகத்தைத் தாங்கி நிற்கிறது. ஆனால், அது - விராதனுடைய ஸ்தோத்திரம் இருப்பினுங்கூட - வேதாளக் கதையின் ஜாதியைச் சேர்ந்ததேயொழிய, மகா காவிய ஜாதியைச் சேர்ந்ததன்று.

"ஹோமர் எழுதிய ஒதூஸியத்தில் வரும் குக்ளோப உபாக்கியானம், விர்கீலியனுடைய ஏனியத்தில் வரும் ஹார்ப்பியரின் செய்தி ஆகிய இவைகளோடு தான் இந்த விராதன் கதையையும், இக்காண்டத்தின் கடைசியில் வரும் அயோமுகியின் கதையையும் ஒப்பிடலாகும்.

"சரபங்கர் பிறப்பு நீங்கு படலம் கதைக்கு எவ்வித உதவியும் செய்யவில்லை. அதை எடுத்து விட்டதனால் கதைக்கு எவ்வித நஷ்டமும் ஏற்படாது. அகத்தியப் படலத்தின் விஷயத்தை ஐரோப்பிய கவிஞர் அது கம்பனில் தோன்றுமிடத்தில் கூறமாட்டார்கள். கதையின் பிற்பாகத்தில் யாராவது இரண்டு நாயகர்கள் சம்பாஷிக்கும்போது இவ்விஷயம் உபாக்கியானமாக வரும்படி செய்வது அவர்களுடைய முறையாகும். அவ்வாறு செய்திருந்தால் இவ்விடத்தில் உள்ள ரசனையைவிட உயர்ந்த ரசனையா யிருந்திருக்கும். ஆனால், சூர்ப்பநகையின் பிரவேசத்திலிருந்து கம்பனுடைய ரசனை மேனாட்டுக் காவியங்களின் சுவையில் தோய்ந்தவருக்கும், கீழ்நாட்டுக் காவியங்களின் ரஸத்தைப் பருகி அனுபவிப்பவருக்கும் சமமான இன்பத்தைத் தரும்.

'சூர்ப்பநகையை அரங்கத்தில் தோற்றுவிக்கும் அழகைத்தான் என்னென்று சொல்லலாம்! வால்மீகியில் சூர்ப்பநகையின் வரவு சாமானியமாகத்தான் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ராமன் ரிஷிகளோடும்

சீதா லக்ஷ்மணர்களோடும் உட்கார்ந்து கொண்டு அவர்களுக்குக் கதைகள் சொல்லிக் கொண்டிருக்கும் காலத்தில் சூர்ப்பநகை சிவந்த தலைமயிரும், கொடிய கண்களும், நரை திரை உள்ள உடலும் முதலிய அலங்காரங்களுடன் ராமனிடம் வந்து, பத்தினியோடு கூட இந்தப் பிரதேசத்திற்கு வந்த நீ யாவன், உன்னுடைய விருத்தாந்தங்களெல்லாம் என்ன என்று கேட்கிருள்."

"சூர்ப்பநகை கேட்டதும், ராமன் தன்னுடைய பூர்வோத்தரத்தைச் சொல்லி விட்டுச் சூர்ப்ப நகையின் பூர்வோத்தரத்தைக் கேட்பதும், சூர்ப்ப நகை தான் ராமனைக் காப்பதாக முதலெடுத்ததுமே வெள்ளையாகச் சொல்லிவிடுவதும், வேலைப்பாடில்லாமல் மொட்டையாக இருக்கிறது. ஆனால் கம்பனில் சூர்ப்ப நகை, மோகனமான உருவத்தைத் தரித்துக் கொண்டு, நூபுரம், மேகலை முதலிய ஆபரணங்கள் குலுங்க, ராமன் தனியே இருக்கும் இடத்தை நோக்கி வர, அவ் உருவத்தைக் கண்ட எம்பெருமான்,

"பாருழையின் இல்லது ஒரு
மெல் உருவு பாரா,
ஆருழை அடங்கும்?
அழகிற்கு அவதி உண்டோ?"

என்று நினைக்கிருன். அவள் வந்து, வெவ்விய நெடுங் கண் அயில் வீசி, அயல் பார்த்து, நவ்வியின் ஒதுங்கி இறை நாணி அயல் நின்றதும், ராமன் அவள் செய்தியை விசாரிக்கிருன். சம்பாஷணை வெகு ருசிகர மாக இயற்கையில் நடைபெறுவது போல, நடக்கிறது. இடையில்தான் அமுதின் வந்த அருந்ததிக் கற்பின், அஞ்சொல் வேயிடை தோளினளான சீதை ராமனிடம் வருகிருள்."

"இந்தச் சிறு, ஆனால் ரசனைத் திறம் அனைத்தையும் காட்டுகின்ற, தந்திரத்தினால், சீதையை ஓர் அரக்கி என்று சூர்ப்பநகை கூறும்படி செய்வதும், ராமன் அதைக் கண்டு சிரித்துச் சூர்ப்பநகையின் தன்மையைப் பரிபூரணமாகத் தெரிந்துகொண்டு விடும்படி செய்து, கதையை அழகுபட அமைப்பதும் கவிக்குச் சாத்தியமாகி விடுகிறது."

**மாய மான்**

வ. வெ. சு. ஐயர் வடமொழியில் உள்ள வான்மீகி இராமாயணத்தைப் பழுதற ஓதிப் பயின்றவர். இந்தியாவின் கலாச்சாரப் பொது மொழியான வடமொழியிடமும் அவர் பற்றுதல் கொண்டவர். தாய்மொழியான தமிழிடத்துப் பற்றுக்கொண்டவராயினும், இன்னொரு மொழியை இழித்துக் கூறுமளவுக்கு தமிழ் வெறி கொண்டவரல்லர் அவர். இவ்வளவிருந்தும் புலமைக் காதல் காரணமாக நெஞ்சை நடுவு நிலையில் நிறுத்தி, வான்மீகியையும் கம்பனையும் ஒப்பு நோக்கி, தமது மனத்தில் பட்ட உண்மைகளை வெளியிட்டுள்ளார்.

கம்பராமாயணத்திலே, மாயமானின் பின் இராமன் சென்றதும், அந்த வஞ்சக மான் இராமனுடைய அம்புக்கு ஆற்றாது அலறிய போது, 'இலட்சுமணா!' என்று குரல் கொடுத்ததும், அதன்பின் லட்சுமணனைப் பற்றிச் சீதை தெரிவிக்கும் கருத்தும் இலக்கிய ரசிகர்களுக்கு விருந்தாகும். ஐயரும் அந்த இடத்தை விட்டுவிடவில்லை. இதோ, ஐயர் கூறுகிறார்:

"மாய மான் விஷயத்தில் லக்ஷ்மணன் ஆட்சேபித்ததும், ராமன் சமாதானம் கூறிவிட்டு வேட்டைக்குப் புறப்பட்டுச் சென்று விடுகிறான் என்று

வால்மீகி செய்திருக்கும் ரசனையில், லக்ஷ்மணனுடைய சாமர்த்தியமும் முன் யோசனையும் வற்புறுத்திக் காட்டப்படவில்லை. லக்ஷ்மணன் ராமனை அவ் வேட்டையினின்று விலக்கப் பன்முறையும் முயன்று பார்த்தால்தான் படிப்போருடைய மனதில் லக்ஷ்மண னுடைய கூரிய அறிவையும் ராமபக்தியையும் விளக்கிக் காட்ட முடியும் என்று கம்பன் ராம லக்ஷ்மண சம்வாதத்தை மிக வேலைப்பாட்டோடு அமைத்திருக்கிறான்.

"சீதை லக்ஷ்மணனைச் சீறி, ராமனை நோக்கிப் போகச் செய்யும் கட்டத்தில், வால்மீகியின் வேலைப் பாட்டுக்கும் கம்பனுடைய கை நயத்துக்கும் உள்ள தாரதம்மியம் மற்றெங்கேயும் விட அதிக விசதமாக விளங்குகிறது.

"இந்தக் கட்டத்தை வால்மீகியிலும் கம்பனிலும் ஆதியோடந்தமாய்ப் படிக்குமவர்க்கு வால்மீகி ராமாயணமானது இடைக்கிடை தங்கக் கொடிகள் கொழுத்து ஓடினாலும், பூமியிலிருந்து அப்படியே பாறையோடு வெட்டி யெடுக்கப்பட்ட கட்டியைப் போன்றதுதான் என்றும், கம்பராமாயணம் அத்தங் கத்தை எடுத்து உருக்கி, மாசுபோக்கி, வார்த்த சொர்ண விக்ரகமாகும் என்றும் தோன்றும்."

## தரமும் திறமும்

கம்ப ராமாயணத்திற்கு அருமையான விமர்சனம் எழுதிய அறிஞர் பெருமக்கள் பலராவர். நம் ஐயருக்குப் பின்னே தோன்றிய விமர்சகர்களோடு ஒப்பிடுமிடத்து, ஐயருக்குள்ள தனிச் சிறப்பை வேறு யாரும் ஆக்கிரமித்து

விடவில்லை என்று சொல்லலாம். ஈடு இணையற்ற கம்ப ராமாயண விமர்சகரான வ. வெ. சு. ஐயர் கம்பருடைய தரம் பற்றியும் திறம் பற்றியும் செய்துள்ள விமர்சனத்தை மேலும் பார்ப்போம்:

"உபாக்கியானங்கள் அமைப்பில் ஹோமரைத் தான் - அவனும் இலியாதைப் பாடுகையில்தான் - மிகச் சாமார்த்தியசாலி என்னலாம். அவன் எழுதிய ஒதுஸியம் என்னும் காவியத்தை உண்மையாக மகா காவிய மென்று சொல்லக் கூடாது. அதை அனேக உபாக்கியானங்களின் சேர்க்கை யென்று சொல்லுவதே முறையாகும். ஆனால், இலியாதிலுள்ள அவனுடைய உட்கதைகள் சிறியனவாயும் அவயவங் களுக்கு அளவில் பொருத்தமாயும் இருக்கின்றன. கதையும் உபாக்கியானங்களும் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு, கதைக்கு இடஞ்சற் படுத்தாமல் பெரும்பாலும் எடுக்க முடியாதனவாய் இருக்கின்றன.

"இராமாயணத்தில் உபாக்கியான அமைப்பு இலியாதின் அமைப்புக்குத் தாழ்ந்ததன்று; இங்கேயும் பாலகாண்டத்திலுள்ள உட்கதைகளை நீக்கிவிட்டுப் பார்த்தால் உபாக்கியானங்களும் மூலக்கதையும் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டு, இணைந்து கொண்டு இருக்கின்றன. இரணியன் கதையைத் தான் கதைக்குக் கேடின்றி எடுத்துவிடக் கூடும். ஆனால், திசை திறந்து அண்டம் கீறிச் சிரித்த செங்கட் சீயத் தின் காம்பீர்யம் நிறைந்த உபாக்கியானத்தை - அமைப்பில் பாகவத கதையையும், விஷ்ணு புராணக் கதையையும் வென்று விட்டு, ராமாயணமாகிற வைர மணி மாலையில் இந்திர நீலமணியைப் போல விளங்கும் இந்த அற்புதமான உட்கதையை - யாரே ராமாயணத்தினின்று எடுக்க ஒருப்படுவர்?"

**வாலி வதை**

வாலி வதைப் படலம் இராமாயண விமர்சகர் களிடையே கடுமையான கருத்து வேற்றுமையைத் தோற்றுவித்துள்ள பகுதியாகும். அதுபற்றியும் வ.வெ.சு. ஐயரவர்கள் விமர்சித்துள்ளார் :

'கிஷ்கிந்தா காண்டத்தின் பிரதான பாகமான வாலிவதை, ராமாயணத்தின் வஸ்துவுக்கு அவயவ சம்பந்தம் வாய்ந்ததன்ருதலால், அதை எடுத்து விட்டாலுங் கதைக்கு யாதொரு ஊனமும் வராது. ஆனால், கம்பன், தன் நாடகத் திறமை அனைத்தையும் இந்த வாலி வதைப் படலத்தில் கொட்டி வைத்து விட்டான். இந்த வாலி வதை உபாக்கியானத்தை மாத்திரம் எழுதி வைத்துவிட்டு வேறொன்றும் எழுதி வையாமல் இருந்திருந்தாற்கூட அறிஞர் அவனை உலகத்து மகா கவிகளின் வர்க்கத்தில் சேர்க்காமல் விடத் துணியார். அத்துணைச் சிறப்பு வாய்ந்தது கம்பனுடைய வாலி வதை உபாக்கியானம்."

**பக்தி இலக்கியம்**

வான்மீகி இராமாயணத்திலுள்ள சுந்தர காண்டம் ஏனைய காண்டங்களைவிடச் சிறப்புடையதாகவும், இராம பக்தர்கள் பாராயணம் செய்யத் தக்கதாகவும் பயன்பட்டு வருகின்றது. துளசிதாசர் புனைந்த இராமாயணத்திலுள்ள சுந்தர காண்டப் பகுதி இந்தி மொழி வழங்கும் மாநிலங் களிலே பக்தி இலக்கியமாகவே பாவிக்கப்படுகிறது.

ஐயரவர்கள் சுந்தர காண்டத்தைத் தமக்கே யுரிய தனிப் போக்கில் விமர்சித்துள்ளார். அது வருமாறு :

"கவி தன் அருமையை யெல்லாம், தன் சக்தியை யெல்லாம், தான் சிறையிருந்து உலகை விடுவிக்க வந்த எம்பெருமாட்டியான சீதா பிராட்டியின் பெருமைகளை வர்ணிக்கும் இந்தச் சுந்தர காண்டத்திலேயே வரையாமற் செலவு செய்திருக்கின்ருன். சிறை யிருந்தாளின் சீற்றத்தைக் கூறுகின்றதுதான் ராமாயணம் என்று ஸ்ரீபிள்ளை லோகாசாரியார் சொல்லியதும், ஸீதாயாச் சரிதம் மகத் என்னும் வால்மீகி ராமாயணப் பாயிரத்தின் சூத்திரத்திற்கு இலக்கியமாக விளங்கும் வால்மீகி ராமாயண சுந்தர காண்டத்தையும், அதற்கு நான் தோற்றேனில்லை என்று துவஜம் கட்டி நிற்கும் கம்ப ராமாயணத்தின் சுந்தர காண்டத்தையும் கருதியேயாகும்."

"ஊர்தேடு படலத்தில் கம்பனுடைய செழுமையுள்ள பாவனு சக்தி கரைபுரண்டோடி இலங்கையை சுவர்க்கத்திற்கும் விழுமியதோர் பூமியாக்கி விடுகிறது. பின்னே வரவிருக்கும் சீதையின் சோகத்திற்கும், இலங்கைத் தீவின் ஆவேசத்திற்கும் இது மணியின் ஜொலிப்பைத் தூக்கிக் காட்டும் வர்ணத் தகட்டைப் போல அடிநிலமாக விளங்குகிறது."

## மகனே திறனுடையான்

" தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது "

என்பது வள்ளுவர் வாக்கு. இதுபோல, காப்பிய உலகிலே முதனூல் செய்த வால்மீகியும், வழி நூல் செய்த கம்பரும், தந்தையும் மகனுமாக விளங்குகின்றனர். பிற்காலத்தில் தோன்றியதனுலும், வான்மீகியிடம் ஆழ்ந்த பக்தி கொண்டு புலமைத் தேனைப் பருகியதாலும், தந்தை

யினும் அதிகப் புலமை மிக்கவராக விளங்குகின்ருர் கம்பர்.

இதோ, உரைநடையிலே கவிதைக்குரிய அழகைப் புலப்படுத்தி, வான்மீகியையும் கம்பரையும் ஒப்பிட்டுக் காட்டித் தந்தையினும் மகனே திறனுடையான் என்று தீர்ப்புக் கூறுகின்ருர் ஐயர்.

'ஒரு உத்கிருஷ்டமான கவிக்குப் பிறகு இன்னொரு கவி அதே கதையைப் பாடிஞனுல், முதல் கவியின் போக்கும் வாக்கும் பின்னவன் காலைச் சுற்றி நிற்கும் சுயத்தனை போலாகி விடுகின்றன. ஆனல், கம்பர் பூமண்டலத்தை ஓர் தலையால் தாங்கும் ஆயிரந்தலை ஆதிசேஷன் போல வால்மீகியின் கனத்தை அலட்சியமாய்த் தாங்கி நடப்பதோடு, அவனது கதையையும் தனக்குக் குற்றவேல் செய்து தன் உத்பிரேக்ஷைகளை அலங்கரிக்கும் மணிப் பூண்களாகச் செய்துவிடுகிருன்.'

"பிறருடைய கதைகளைச் சுவீகரித்து, அவற்றை முதனூலாசிரியன் போலவே சுதந்திரமாகவும் கம்பீரமாகவும் நடத்திக் கொண்டு போவதில் கம்பன் ஹோமரின் கதைகளைச் சுவீகரித்துக் கையாண்ட எஸ்கூலனுக்கும் ஸோபோகிளனுக்கும் ஓர் படி உயர்ந்தவன் எனவே அறிஞர் கண்டு கொள்வர்."

### யுத்த காண்டம்

கம்பராமாயணத்தை விமர்சிக்கும் புலவர்களிலே எவரும் யுத்த காண்டத்தில் ஆழ்ந்துவிடும் வழக்கமில்லை. அதிலே கம்பனுடைய புலமையிலே ஆழமில்லை என்று கருதுவோரும் உண்டு. ஆனல் வ. வெ. சு. ஐயர் வேறு விதமாகக் கருதுகிருர். அதனை அவரே கூறக் கேட்போம்.

"கம்பனுடைய யுத்த காண்டம் ஒன்று மாத்திரம் அளவில் மேனாட்டுப் பெரிய காவியங்களுக்கு ஏறத் தாழச் சரியாக இருக்கிறது. சாதாரணப் பதிப்புகளில் யுத்த காண்டத்தில் 4358 விருத்தங்கள் காணப்படு கின்றன. ஹோமர் எழுதிய இலியாதில் 15,693 அறு சீர்வரிகளே இருக்கின்றன என்று கணக்கிடுகிறார்கள். ஆதலால், கம்பரது யுத்தகாண்டம் இலியாதைவிடப் பெரிதாகவே இருக்கிறது. அவ் இலியாதில் உள்ள சகல சுவைகளையும் இக்காண்டத்தில் நாம் காண லாகும்."

"இக் காண்டமே கம்ப ராமாயணத்தின் இறுதிக் காண்டம். இதில்தான் கதையின் வஸ்து சம்பூர்ண மாகிறது. சாதாரணமாக நமது பண்டிதர் யுத்த காண்டத்தை மற்ற ஐந்து காண்டங்களையும் படிக்கும் கவனத்துடன் படிக்கிறதில்லை. அவர்கள் இதில் மற்ற காண்டங்களில் உள்ள சுகம் இல்லை என்ற ஓர் எண்ணத்தை உண்டாக்கி, படிப்போருக்கு இதன்மீது ஓர் அசிரத்தை ஏற்படும்படி செய்து விட்டார்கள். ஆனால் கம்ப ராமாயணத்தின் பெருமை எல்லாம் இவ் யுத்த காண்டத்தில்தான் காணப்படும். இதுதான் கம்பராமாயணமாகிற விஸ்தாரமான துர்க்கத்தில் அரசன் உகந்து வாழும் அரண்மனையாகும்."

"ஆகையால் கம்பன், தனது ரசனைத் திறன் அனைத்தையும் இங்கே காட்டியிருப்பான் என்று எதிர் பார்ப்பது முறையே யாகும். கம்பனும் அவ்வாறு உண்மையில் தம் சக்தி அனைத்தையும் இக் காண்டத் தில் காட்டியுள்ளான்."

"போரை வர்ணிப்பதில் ஹோமரேதான் சிறந்த கவி என்ற மேனாட்டு ஆசிரியரின் கூற்றுக்களைக் கண்டும், ஹோமரின் உத்கிருஷ்டமான யுத்த

வர்ணனைகளைப் படித்துப் பார்த்தும், நாம் மயங்கிப் போய், ஹோமரின் போர்ச் சித்திரங்களைவிட, உயர்ந்த சித்திரங்கள் கிடையா என மதித்திருந்தோம். ஆனால், கம்பராமாயணத்தின் யுத்த காண்டத்தைப் படித்துப் பார்த்ததும், கம்பர் போர் வர்ணனையில் ஹோமருக்குத் தாழ்ந்தவனில்லை என்றும், சில இடங்களிலும், சில விஷயங்களிலும் ஹோமரது போர் வர்ணனையை வென்றிருக்கிறனென்றும் கண்டு கொண்டோம்."

இப்படி, உலக மகாகவிகளின் அவையிலே தமிழ் மொழிப் புலவரான கம்பர் தலைமை தாங்குகின்றார்; மகாகவிகள் மத்தியிலே அவர் சக்ரவர்த்தியாக விளங்குகின்றார் என்ற உண்மையினை உலகறியச் சொல்லி, தமிழ் மொழிக்குப் பெருமை தேடினார் வ. வெ. சு. ஐயர். அவர் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட தியாகச் செம்மல்; தேசியவாதி என்பதனை நினைக்கும் போது எனது இதயம் பூரிக்கின்றது.